உ

சிவமயம்

கோவைகிழார் - ம. இராமச்சந்திரனர்

# வாழ்க்கை வரலாறு



கோவைத் தமிழ்ச் சங்கம்

சாது அச்சுக்கூடம்,
இராயப்பேட்டை, சென்னை.
1948

# பதிப்புரை

இந்நூல் கோவை. ம. இராமச்சந்திரனுர் அவர்களின் வாழ்க்கை வரலாற்றின் சுருக்கமாகும். அவர்களது அறுபதாவது ஆண்டு நிறைவின் நினைவாக இந்நூல் வெளியிடப்படுகிறது. தமிழுக்கும் கலைகளுக்கும் சமயங்களுக்கும் அவர்கள் செய்த சேவைகளை ஒருவாறு இதனுல் பொதுமக்கள் அறியக்கூடும். கோவைத் தமிழ்ச் சங்கத்திற்கு அவர்களும் அவர்களுடைய குடும்பத்தார்களும் மிகுந்த உதவி புரிந்திருக்கிருர்கள். அதனை மேற்கொண்டு கோவைத் தமிழ்ச்சங்கம் அவர்களுடைய வரலாற்றின் ஒரு பகுதியை இந்நூல்மூலமாகப் பொதுமக்களுக்கு வெளியிடுகிறது. அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் இதேவிதமான திருத்தொண்டுகளில் ஈடுபடவேண்டி இறைவன் ஆயுளும் உடல் நலமும் அவர்களுக்கு அருளுவாராக!

கோவை
சர்வக[illegible]த்திரிகைத்
திங்கள் }

கோவைத்
தமிழ்ச் சங்கத்தார்.

உ

சிவமயம்

கோயமுத்தூர், இராவ்பகதூர் திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார்,
B.A., B.L., F.R.G.S., F.M.U., அவர்களின்
அறுபதாண்டு நிறைவு விழாவின் போது
அவரது நண்பர் கோவை சிவக்கவிமணி
திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் B.A., அவர்கள் கூறிய

# வாழ்த்துரை

நீடு வாழி ! நீடு வாழி !
பீடுயர் தோன்றல் ! நீடு வாழி !
கோவை மாநகரின் குலவுதெய் வப்பெயர்ப்*
பாவை தன்னொடு மேவிய பண்பன்
மருதா சலப்பெயர் மருவிய பெருந்தகை
தருமகார் மூவருள் வருநடு நாயக !
இராமசந் திரனென விராவிய புகழாய் !
நல்லதே வாங்க நன்குல மணியே !
வல்லபல் கலைகளு மாண்புறப் பயின்றாய் !
பொதுநலச் சேவை புகழெனப் பூண்டாய் !
கல்வித் துறையுஞ் சரிதத் துறைகளும்
நாட்டினர் நலம்பெறக் கூட்டிய பணியாய் !
சைவமுந் தமிழுங் கைவரச் செய்வோய் !
கோவைத் தமிழ்ச் சங்கத்திற் கதிகநற்
சேவை புரியுஞ் செம்மால் ! நின்றன்
கொற்றம் வாழ்க ! குறிக்கோள் வாழ்க !
மைந்தரு மனைவியு மொக்கலு மனமகிழ்ந்
திந்திரச் செல்வத் தினிது வாழ்க ! நின்
அறுபதிற்றி யாண்டு நிறைவுறு மிந்நாள்
நின்னுளங் கருதிடு நன்னல மூற்றும்
நல்குக வென்று நயந்து
வெல்குக னடியிணை வேண்டினம் பெரிதே.

* கோனம்மாள்.

கோவைத் தமிழ்ச்சங்கம்
சேக்கிழார் நிலையம்
கோயமுத்தூர்
27—11—1948

இங்ஙனம்
அன்புரிமையும் நண்புரிமையும் உள்ள
C. K. சுப்பிரமணியம்

# முன்னுரை

இச்சிறு நூல் தமிழ்நாட்டில் பிறந்த ஒரு தமிழ் அறிஞர் வாழ்க்கை வரலாறு. தம் வாழ்க்கையில் எப்பொழுதும் தமிழையும் சமயத்தையும் பேணினவர். அவரைப் பற்றி இந்தச் செய்தியே முன்னுரையாக இருந்தால் போதும். வேறு செய்திகள் முன்னுரையில் எழுத வேண்டியதில்லை. பொதுமக்கள் இதனைப் படித்து இதில் கண்ட செய்திகளை ஒரு சிறிது அறிந்து கொண்டாலே இந்நூல் வெளியிட்டதினால் பயன் ஏற்பட்டுவிட்டது என அறியலாம்.

# பொருளடக்கம்



கோவை ம. இராமச்சந்திரனார்

1948

உ

சிவமயம்

# கோவைகிழார் - ம. இராமச்சந்திரனுர்

# வாழ்க்கை வரலாறு

## 1. குலமும் குடும்பமும்

உணவு, உடை, உறையுள் என்ற மூன்றும் மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள் அன்றோ. அவைகளில் உணவுப் பொருள்களை ஈட்டுதல் மிகச் சிறந்த தொழிலாகக் கொண்டு நாட்டில் பெரும் பான்மை மக்கள் அதில் ஈடுபடுகிறார்கள். உணவிற்கு அடுத்தது உடை ஆகும். உடையை ஈட்டும் தொழி லில் உணவிற்கு அடுத்தபடியாக மக்கள் ஈடுபடுகிறார் கள். உடை உண்டு செய்யும் தொழிலிலே நெசவு வாணிபம் என்ற இரண்டு சிறப்பான பகுதிகள் உண்டு. நெசவுக்கு வேண்டிய முதற்பொருள்கள் பருத்தி, பட்டு, மயிர், நார் முதலிய விளைவு பொருள் களே. அவைகளை ஈட்டி நூல் ஆக்கித் தருவதும் நெசவுக்குத் துணைத் தொழிலாகும். அத்துணைத் தொழிலின் உதவியைக் கொண்டு நெசவும், பிறகு வாணிபமும் செய்து பிழைக்கும் மக்கள் பல வகுப் பினர்களாக நமது நாட்டில் இருக்கின்றனர். அவ் வகுப்பினர்கள் பல நாட்டு மொழிகளையும் பேசுகிற

வர்களாகவும் இருக்கின்றனர். ஆனால், அவர்கள் எல்லாரும் தொழில் முறையில் அன்யோன்ய முறையில் வசிக்கிறவர்களாக இருக்கிறார்கள்.

அவ்வாறு செய்து பிழைக்கும் வகுப்புக்களிலே தேவாங்க குலம் என்பது தென்னாட்டில் மிகவும் சிறந்து விளங்குகிற ஒரு குலம். இக் குலத்தார் தென் நாட்டிலே தெலுங்கு, கன்னடம் என்ற இரு மொழிகளையும் பேசுகிறார்கள். மராட்டிச் சீமையில் மராட்டியும் பேசுகிறார்கள். சரித்திரக் கூற்றின்படி இக் குலத்தார், கருநாடக சாம்ராச்சியத்தில் மிகுதியாக வளர்ந்து அதன் தலை நகராக இருந்த விஜய நகரம் என்ற ஹம்பியில் குருபீடம் அமைத்து அதன் சீடர்களாக வாழ்ந்து வந்தார்கள். கருநாடக சாம்ராச்சியம் பல திக்குகளிலும் படர்ந்த காலங்களில் இக் குலத்தார்களும் பல திக்குகளிலும் குடியேறினார்கள். ஹம்பி வீழ்ந்தபோது, இவர்கள் தாங்கள் சென்ற இடங்களிலேயே தங்கிவிட்டார்கள். அவ்விதம் சில குடும்பத்தார்கள் தமிழ் நாட்டில் தங்கியிருந்தார்கள். அக் குடும்பங்களிலே ஒன்று 'மேடும்' என்ற வீட்டுப் பெயர்கொண்ட குடும்பக் கூட்டம். இக் குடும்பத்தார்கள் இப்போது கோவை, கொள்ளேகாலம், சித்தூர் (கொச்சி), ஆய்க்குடி. (மதுரை), காட்டுப்புத்தூர் (திருச்சி), சேலம், சென்னை முதலிய இடங்களில் பிரபலமாக இருக்கிறார்கள். கோவையிலே இக் குடும்பம் பல கிளைகளாகப் பிரிந்து வாழ்கிறார்கள். அவைகளில் ஒன்று சுக்கிரவாரப் பேட்டையில் உள்ளது. இக் குடும்பத்தார்கள் சில நூற்றாண்டுகளாகக் கைத்தொழில் வாணிபம் இரண்டும் செய்துகொண்டு சிறந்து விளங்குகிறார்கள். மற்றும் கல்வி கேள்வி

களில் சிறந்த பெயர்கள் பல பேர்கள் இக் குடும்பத்தில் தோன்றி யிருக்கிறார்கள்.

இப்போது தெரிந்தமட்டில் இக்குடும்பத்தின் மூதாதைகளில் ஒருவராகக் குள்ள பசுவையன் என்பவர் இருந்தார். அவர் ஒன்றரை நூற்றாண்டுகளுக்கு முந்தியே நிலக்கிழாராகவும் வாணிபப் பெருமகனாகவும் விளங்கி இருந்தார். அவருடைய மூத்த சந்ததியார்களாக சாமையயன், கிரியன், நஞ்சப்பன், மருதாசலம் என்ற பெரியார்கள் ஒருவருக்குப்பின் ஒருவர் மக்களாக மூத்த குடியினராகத் தோன்றினார்கள். அவர்களும் கைத்தொழில் வாணிபம் முதலியவைகளில் ஈடுபட்டு வந்தார்கள். மருதாசலம் செட்டியாருக்குக் கிரிய செட்டியார் என்ற ஒரு தம்பியார் இருந்தார். இவ்விருவரும் மிகப்பெரிய வாணிபத்தில் ஈடுபட்டு மிகுந்த செல்வந்தர்களாக வாழ்ந்தார்கள். கிரிய செட்டியார் ஆங்கிலமும் கற்றுப் பல பொதுச் செயல்களிலும் நாட்டுச் சேவையிலும், நகர பரிபாலனத்திலும் ஈடுபட்டுப் பெரும் புகழைப் பெற்றிருந்தார். மூத்தவரான மருதாசலம் செட்டியார் வர்த்தகத்தில் ஈடுபட்டு மிகவும் சத்தியசீலன் என்ற பெயர் பெற்று நகரம் எங்கும் சிறந்து விளங்கினார். இவர்களில் மருதாசலத்திற்கும் அவரது பத்தினியார் கோனம்மாள் என்ற அக்கம்மாளுக்கும் மூன்று புதல்வர்களும் ஆறு புதல்விகளும் பிறந்தார்கள். இம் மக்களில் நடுவினாகத் தோன்றியவன் இராமச்சந்திரன் என்ற இயற் பெயர் வாய்ந்தவன்.

இராமச்சந்திரன் சர்வதாரி ஆண்டு கார்த்திகைத் திங்கள் 19-ம் நாள் வெள்ளிக்கிழமை சித்திரை நட்சத்திரத்தில் தோன்றினான் (30 - 11 - '88).

அவனது பெயரையும் பிறந்த நட்சத்திரத்தை ஒட்டியே வைக்கப்பட்டது. தொன்று தொட்டுச் சைவக் குடும்பத்தில் தோன்றியிருந்தும் முந்திய தோன்றல்களுக்குச் சைவப் பெயர்கள் வைக்கப் பட்டிருந்தும் இக் குழந்தை பொருந்தின மட்டில் பெயர் மாறினதற்குக் காரணம் புரோகிதர் கோள் பெயர் வைக்கும்படி சொன்னதினுல் என்பர். இக் குடும்பத்தில் சிறப்பாக சிவராத்திரித் திருவிழா வெகு விமரிசையாக நடைபெறுவது வழக்கம். அப்போது குலத்தில் தீட்சை பெற்று இலிங்கம் தரித்தவர்கள் எல்லாரும் அழைக்கப்பெற்று பலவித உபசாரங் களுடன் வணங்கப்படுவார்கள். 1008 திருநாமத் துடன் சிவலிங்க வணக்கம் குலத்துக் குருக்களைக் கொண்டு நடத்தப்பெறும். அப்படிப்பட்ட குடும்பம் இதுகாறும் நடவடிக்கையிலும் உணவிலும் சுத்தச் சைவக் கொள்கைகளையே அனுசரித்து வருகின்றது. இராமச்சந்திரனும் இம்முறைகளிலேயே வளர்த்தப் பட்டான்.

## 2. இளமையும் படிப்பும்

இராமச்சந்திரன் பிறந்தபோது பெற்றோர்கள் வசித்து வந்தது ஒரு பண்டைக்காலத்துச் சிறிய வீடு ஆகும். அதற்கு நூறு நூற்றியைம்பது ஆண்டுகளுக்கு முந்தியே கெட்டி மூங்கில்களால் வேய்ந்து நாட்டு ஓடு களால் போர்த்தது அவ்வீடு ஆகும். இரண்டு பெரிய அறைகளும் கூடமும் அது கொண்டிருந்தது. புற வடையில் ஒரு நீர்க் கொட்டமும் பசு மாட்டுச் சாலை யும் மலம் கழிக்கும் இடங்களும் இருந்தன. மேலும்,

ஒரு பண்டை வேப்பமரம் அவ்வீட்டுக்குக் காவலாகவும் நிழலைக் கொடுத்துக் கொண்டும் இருந்தது. வீட்டுக்கிணறோ உப்பு நீர். வீடு சிறியதாக இருந்ததற்குக் காரணம் அக் காலத்திற்கு முந்தி பரம்பரையாக வந்த பண்டைப் பெரிய வீடு நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டதே ஆகும். மேலும், அந்த நாள் 'சிறுகக் கட்டிப் பெருக வாழ்' என்ற பழமொழியையே இக் குடும்பத்தார் போற்றிவந்தார்கள். இவ்விதப் பண்டைய வீட்டில் இச் சிறு குழந்தை விளையாடிக் கொண்டு வளர்ந்தது.

மேடும் குலத்துக் குடும்பங்களில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும் கோவைக்கு அடுத்து 7½ கல் அளவில் உள்ள மருத மலையில் எழுந்தருளியிருக்கும் மருதாசலக் கடவுள் (முருகப் பிரான்) சந்நிதியில் முடி வாங்குவது வழக்கம். வேண்டுதலை இருந்தால் அந்தக் கோயிலுக்குத் தான் காவடி எடுத்துச் செல்லுவதுண்டு. இக்குழந்தைக்குச் சாதாரணமான முடிச் சடங்கே செய்யப்பட்டது.

குடும்பத்தார் வசித்துவந்த தெருவில் ஒரு சிறு நகர சபைத் தொடக்கப் பாடசாலை இருந்தது. தனது ஆறும் வயதில் இராமச்சந்திரன் இப்பாடசாலையில் சேர்க்கப்பட்டான். அடுத்த ஆண்டில் ஊர் எங்கும் வாந்திபேதி என்ற கொடிய தொத்து நோய் தோன்றிற்று. ஆவணி அவிட்டத்தின் போது பூணூல் நோன்பிற்காகக் குடும்பத்தார் ஆயத்தமாக இருக்கையில் குடும்பத்தில் மூவருக்கு இப் பயங்கரமான நோய் கண்டது. தாயார் முந்தின நாள்தான் பிரவசித்திருந்தாள். அந்தக் கொடுமையோடு பேதியும் கண்டுவிட்டது. இராமச்சந்திரனுக்கும் தமக்கை சௌடம்மாளுக்கும்

நோய் பரவிவிட்டது. கிரிய செட்டியார் நகர சபையில் முக்கிய அங்கத்தினராக இருந்தார். அன்னுர் குடும்பத்தில் மூன்றுபேர் நோய் வாய்ப்பட்டனர் என்ருல் சொல்லவும் வேண்டுமா? ஊரே அல்லோல கல்லோலப் பட்டுவிட்டது. பெரிய வைத்திய நிபுணர்கள் எல்லாரும் வந்தார்கள். இரண்டு மூன்று நாள்களில் இறைவன் கருணையால் மூவரும் சௌக்கியம் அடைந்தார்கள். பாடசாலை உபாத்தியாயர் பெற்ருேர்களிடம் வந்து 'இந்தக் கொடிய நோயிலிருந்து பிள்ளை தப்பித்துக் கொண்டதினுல் இவனுக்குக் கடவுள் தீர்க்க ஆயுள் தந்தருளியிருக்கிருர்' என்று வாழ்த்திவிட்டுச் சென்ருர்.

பாடசாலையில் பையன் திறமாக வாசித்தபடியால், 2-வகுப்பிலிருந்து 4ம் வகுப்புக்கு எடுத்துக் கொள்ளப் பட்டான். 1898-ல் தொடக்கப் (பிரைமரி) பரிட்சையில் ஆங்கிலத்தில் முதல் தரமாகத் தேறினுன். பிறகு I பாரம் முதல் III பாரம் வரை இலண்டன் மிஷனிலும் IV முதல் VI வரை கோயமுத்தூர் கல்லூரியிலும் வாசித்து 1906-ல் மெட்ரிக் என்ற பிரவேசப் பரீட்சையில் தேறினுன்.

அந்தக் காலத்தில் குடும்பத்து வாணிபமும் செல்வாக்கும் மிகவும் பெருகியிருந்தது. இவர்களின் வண்டிகளும் குதிரைகளும் கோவையிலேயே பேர்பெற்றவை. அவைகளில் ஒரு குதிரை மிகப் பிரசித்திபெற்றது. அதன் குறியும் மிகவும் சிறந்ததென்பர். அதனை அதன் வாழ்நாள் முழுவதும் குடும்பத்துச் செல்வப் பொருளாகவே பாவித்து வளர்த்தினுர்கள். சாதாரணமாக இக்குடும்பத்தார் ஊரை விட்டு வெளியே செல்வதில்லை. முதல் முதலாக 1902 ல் தான் பவானி திருச்

செங்கோடு முதலிய தலங்களுக்கு இக்குடும்பம் இருப்புப் பாதை மூலம் பிரயாணம் செய்தது. பிறகு 1903-ல் ப்ளேக்கு என்ற நச்சுச்சுரம் கோவையில் தோன்றிடவே இரண்டு மூன்று மாதங்கள் மதுரை இராமேசுவரம் முதலிய இடங்களுக்கு குடும்பம் முழுவதும் சென்றது. அந்தப் பிரயாணங்களில் இராமச்சந்திரன் அடைந்த அனுபவம் மிகச்சிறந்தது. அதுவே பின்னைய நாட்களின் அறிவு முதிர்ச்சிக்கு அடிப்படையாக இருந்தது. இராமேசுவரத்தில் இருந்தபோது சாரவாக்கு நாட்டு (கிழக்கிந்திய தீவு) நாணயம் ஒன்று அகப்பட அதைச் சேமித்து வைத்துக்கொண்டு அது முதல் நாணயச் சேகரிப்பை ஒரு விளையாட்டாக வைத்துக்கொண்டான். 1904-ல் கல்லூரியில் தன் வகுப்பில் இரண்டாம் மாணவனாகத் தேறியிருந்தான். விதிகளின்படி இலவசச் சம்பளம் கிடைக்க வேண்டியிருந்தது. இருந்தாலும் குடும்பச் செல்வாக்கை அனுசரித்து அது அளிக்கப்படவில்லை. 1906-ல் F. A. பரீட்சையில் தேறினான். கோவையிலேயே தன் குலத்தில் இவனே முதன் முதலாக இப்பரீட்சை கொடுத்துத் தேர்ந்தது.

அந்த நாளிலேயே ஆங்கிலத்திலும் தமிழிலும் சிறு சிறு கவிகள் எழுதும் வழக்கம் இவனுக்கு வாய்த்திருந்தது. கணக்கில் மிகுந்த பயிற்சி அடைந்திருந்தான். 1907, 1908 ஆண்டுகளில் சென்னைக்கு சென்று B. A. வகுப்பில் இராசதானிக் கலாசாலையில் சேர்ந்து அதில் தேறினான். கோவையில் பண்டிதர்கள் திருச்சிற்றம்பலம்பிள்ளை, சபாபதி பிள்ளை என்பவர்களிடமும் சென்னையில் மகா மகோ உபாத்தியாயர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் இடமும் தமிழ் வாசித்தான்.

சென்னையில் வாசிக்கையிலேயே பல செய்யுட்கள் எழுதினதுண்டு. கல்லூரித் தமிழ்ச் சங்கத்தில் மறைமலையடிகள் பூர்வாசிரமத்தில் வேதாசலம் பிள்ளை என்ற பெயரில் கிறிஸ்தவக் கல்லூரியில் தமிழாசிரியர் ஆக இருந்தபோது அவர்கள் தலைமையில் கந்தபுராணம் என்ற ஒரு அருமையான கட்டுரைப் பேச்சு நிகழ்த்தினான். அவனோடு தமிழ் வகுப்பில் உடன் வாசித்தவர்கள் மதுரை, அ. வைத்திய நாதையர் முதலியோர். பிறகு சட்டக் கல்லூரியில் வாசித்து 1912ல் B. L. பட்டம் பெற்றான். இதனோடு கல்லூரிப் படிப்பு முற்றுப் பெற்றது. பி. ஏ. வகுப்பில் வாசிக்கையிலேயே 1907-ல் திரு. வெ. அங்கண்ண செட்டியார் திருமகள் செல்லம்மாளைத் திருமணம் செய்து வைத்தார்கள். திருமணமும் அது வரை கோவை நகர் கண்டறியாத சிறப்பில் நடைபெற்றது.

அக்காலத்து வழக்கப்படி மணப் பெண் பூப்பு அடைவதற்கு முந்தியே திருமணம் நடைபெறுவது ஆகும். மணமகன் சென்னையில் வாசித்துக் கொண்டிருக்க மணமகள் கோவையில் இருக்கவேண்டி வந்தது. சில ஆண்டுகள் கழித்தே சாந்தி முகூர்த்தம் நடைபெற்றது. தன் தொழிலில் புகுந்த பிறகுதான் மணமக்கள் இல்லறம் நடத்தினார்கள். ஆகவே திருமணம் கல்விக்கு யாதொரு தடையாகவும் இருக்கவில்லை.

குடும்பம் பெரிதாகி வளர்ந்து வந்ததினால் குடியிருந்த சிறு வீடு போதாமல் இருந்தது. 1901-ம் ஆண்டிலேயே கிரிய செட்டியார் ஒரு சிறந்த மாளிகை கட்டிக்கொண்டு தனியே குடியிருக்க தொடங்கினார். குடும்பப் பழைய வீடும் பெருக்கப்பட்டுப்

பெரிய மேடை வீடாகக் கட்டப்பட்டது. இராமச்சந்திரன் படிப்பு முடித்துக்கொண்டு கோவைக்குச் சென்ற போது அவன் வாழ்க்கை நடத்துவதற்குப் புது வீடு ஆயத்தமாக இருந்தது. இந்த முறையில் கல்லூரிப் படிப்பு ஒருவாறு நடந்தேறியது.

## 3. மக்கட் சேவையும் அறிவு கூர்தலும்

இராமசந்திரன் பாடசாலைகளில் வாசித்த காலத்திலேயே அவனுடைய சிறிய தகப்பனர் அவனை உபன்யாசங்களுக்கு அழைத்துச் செல்வார். சிறப்பாக ஞாயிறு தோறும் பிரம்மஞான சபைக் கூட்டங்களுக்கு கூட்டிக்கொண்டு செல்வார். அப்போது கோவையில் தி. சதாசிவ ஐயர் முன்சீபாக இருந்தார். அவர் பிரமஞான சபைக்கிளை ஒன்று தோற்றுவித்துத் தானே அதில் உபன்னியாசம் செய்துவந்தார். சிறிய தகப்பனர் அதில் ஒரு அங்கத்தினர். அச்சபை வெகு ஒழுங்காக நடந்து வந்தது. பெரியவர்களுக்குச் சதாசிவ ஐயரும் இளைஞர்களுக்கு இராமசாமி ஐயரும் வகுப்புகளை நடத்துவார்கள். அக்காலத்தில் பல ஆண்டுகளாக இராமச்சந்திரன் இளைஞர்க் கூட்டங்களுக்குச் சென்று உரைகளைக் கேட்டு வந்தான். இவனுடன் கூடச் சென்று வந்த ஒரு சாலை நண்பன் ஏ. வி. நாராயணசாமி என்ற மற்றொரு மாணவன். (இவர் பின்னால் M. A., L. T. ஆகிக் காகிநாடாவில் ஆசிரியராகி இருந்தவர்). இவர்கள் இருவரும் சமயப் படிப்பேயன்றி சமூக சேவையிலும் பயிற்சி பெற்றார்கள். இராமச்சந்திரனும் அந்தக் காலத்தில் சமயப் படிப்பு பெறுவதற்காக வடமொழி, தெலுங்கு

முதலிய மொழிகளைத் தானே கற்றுக்கொள்ளத் தலைப்பட்டான்.

சென்னையில் கல்லூரிப் படிப்பு பெற்றுக் கொண்டிருக்கையில் திருவல்லிக்கேணியில் கெல்லெட் உயர்தரப் பாடசாலையில் ஞாயிறுதோறும் சமூக சேவை வகுப்புகள் நடைபெற்று வந்தன. அப்போது லீத், ஹூப்பர் என்ற மிஷனரிகள் இளைஞர்களைச் சேர்த்துக்கொண்டு சமூக சேவையில் ஈடுபடுத்தினார்கள். கூட்டங்கள் பாடசாலையிலும் கடற்கரையிலும் நடைபெறும். இராமச்சந்திரனும் அவனுடைய நண்பன் சி. ஆர். இராமசாமியும் இந்தக் கூட்டங்களுக்குச் சென்று சேவை செய்வதில் ஈடுபடுவார்கள். அந்தக் காலத்தில் மது விலக்கு இயக்கம் தோன்றிற்று. மது பானத்தை மிதபானம் ஆக்கவேண்டும் என்பது முதல்படி. மிஷனரிகளுடன் சேர்ந்துகொண்டு திருவல்லிக்கேணித் தெற்குப் பாகத்தில் இருந்த கள்ளுக் கடைகளுக்கு அருகில் சேரிகளில் இவர்கள் இந்த இயக்கத்தை நடத்தினார்கள். மேலும் அச் சேரிகளில் இரவுப் பாடசாலைகள் வைத்து தாழ்ந்த வகுப்பினர்களுக்கு எழுத்து வாசனை ஊட்டுவதிலும் சுகாதார நீதிகளைப் போதிப்பதிலும் வழிபாடு செய்து வந்தார்கள். இவ்விதமான பயிற்சி பிற்காலத்தில் மிகவும் பயன் தந்தது.

மாணவனாக இருந்தபோது சமூக சேவையில் பெற்ற பயிற்சி பின்னால் தன் தொழிலுக்கு சென்ற பிறகும் உதவிற்று. முதலில் தன் குலத்துச் சிறுவர்களுக்குச் சேவை செய்ய வேண்டுமென்று கருதி தேவாங்கச் சிறுவர் சபை என்ற ஒரு சபை நிறுவித்து அதன் செயலாளனாக வேலைசெய்து வந்தான். அச்

சபையில் பாடசாலை மாணவர்கள் சேர்ந்து மாலை நேரங்களில் நூற்சாலை வாசகசாலைகளில் வாசிப்பதும் வாரத்திற்கு ஒரு முறை யாதாவதொரு பொருளைப் பற்றிப் பேசுவதும் நியமமாகக் கொண்டிருந்தார்கள். திக்கற்ற பிள்ளைகளுக்கு உதவிச் சம்பளம் கொடுக்க ஒரு நிதியும் திரட்டப்பட்டது. அப்போது தாபித்த சபை இன்னமும் நடந்து வருகிறது. அதன் தலைவனாக இவனே இன்னமும் இருந்து வருகிறான்.

தன் தொழிலில் புகுந்த உடன்பத்திலேயே மற்றொரு தாபனத்திலும் சேர்ந்து உழைத்து வந்தான். திரு. பி. கே. இராமகிருஷ்ணையர் என்ற பேர்போன வழக்கறிஞர் ஒருவர் கிராம ஊழியர் சங்கம் ஒன்று நிறுவினர். அதில் தொடக்கத்திலிருந்தே திரு. பாஷ்யாச்சாரியார், சி. ஆர். இராமசாமி, இராமச்சந்திரன் முதலியோர்கள் சேர்ந்து உழைத்தார்கள். கிராமங்களுக்குச் சென்றுக் கிராமப் பஞ்சாயத்துகளைத் தாபிப்பதும் அவைகளுக்கு நடப்பு விதிகளைக் கற்றுக் கொடுப்பதும் சுகாதாரத்தைப்பற்றிப் பிரசங்கங்கள் செய்வதுமே அச்சங்கத்தின் முக்கியத் தொழிலாகும். இச் சங்க வேலைக்காக ஒரு காட்சிக் கருவியும் 500 ரூ. மதிப்பில் தருவிக்கப்பட்டது. அதனைக் கொண்டு சுகாதாரப் படங்கள் கிராமத்தார்களுக்குக் காட்டப் பட்டன. இந்தச் சேவையை சிறப்பாக இராமச் சந்திரன் செய்து வந்தான். ஓய்வு நாட்களிலே ஈருருளியின் (சைக்கில்) மீது ஏறிச்சென்று இச் சேவையைச் செய்துவந்தான். கணபதி, சீரநாயக்கன் பாளையம், பன்றிமடை, ஒண்டி புதூர் முதலிய இடங்களில் பஞ்சாயத்து கிராமசபை முதலியவைகள் ஏற்படுத்தப்பட்டன. அரசியலாரும் இந்த வேலைசெய்ய

அதிகாரமும் கொடுத்தார்கள் (Hon. Organiser of Panchayats). கிராமங்களில் பொருளாதாரக் கணக்குப் புள்ளிகள் சேகரிக்கப்பட்டன. இந்தச் சேவையால் கிராமத்தார்களுக்கு நன்மை ஏற்படுவது மட்டுமன்றி சேவை செய்பவர்களுக்கும் பொது அறிவு விருத்தியாகிப் புகழும் வந்தது. இந்தச் சங்கம் சுமார் பத்து வருடகாலம் வெகு நன்ருக வேலை செய்தது. இந்தச் சேவை தலத்தாபனச் சேவைக்கு அடிகோலிற்று.

## 4. தொழிலும் மணவாழ்க்கையும்

சட்டப் பரீட்சை தேரினதும் கோவையிலே வழக்கறிஞர் தொழிலில் இராமச்சந்திரனர் அமர்ந்தார். தொடக்கத்தில் கோவையில் ஒரு பிரபல வழக்கறிஞரிடம் சில மாதங்கள் வேலை பழகினர். அதனுலே அதிக பயன் பெறவில்லை. பிறகு தானே தன் தொழிலில் புகுந்து வேலை செய்தார். சிறிது சிறிதாக வேலை கிடைத்தது. நாளடைவில் வேலையும் பெருகிற்று. ஆனுல் நிரம்பப் பொருள் பெறக்கூடிய அளவில் ஊக்கம் கொள்ளவில்லை. அவருடைய எண்ணம் எப்போதும் பொருள் வருவாய்மீது இருக்கவில்லை. மக்கட் சேவையிலேயே இருந்தது. ஆகவே, எவ்வாறு அத்தொழிலில் மேலானபடிவரை ஏற முடியும்? ஆனுல் அவர் மிகவும் கண்ணியமாகவே தம் தொழில் நடத்தி வந்ததினுல் அவருடைய குடும்பத்திற்கு வேண்டிய வருவாய் கிடைத்து வந்தது. தொழிலுக்கு வந்த நாள் முதற் கொண்டு கூடிய மட்டிலும் சௌகரியமான வாழ்விலே இருந்ததுமன்றி

தமக்கும் தமது குடும்பத்திற்கும் வேண்டிய செலவுகள் முழுவதும் தாமே சம்பாதித்துச் செலவழித்தாரே அன்றி பெற்ரோர் சொத்தைச் சற்றும் எதிர் பார்க்கவே இல்லை. இதையே ஒரு குறிக்கோளாகக் கொண்டிருந்து வாழ்க்கை நடத்திவந்தார்.

தாம் ஏற்றுக்கொண்ட வழக்கறிஞர் தொழில் தம் மனதிற்கு ஏற்றதல்ல என்று அவர் அடிக்கடி எண்ணினது உண்டு. ஒரு ஆசிரியனுகவோ அல்லது ஆராய்ச்சியாளனுகவோ இருந்திருந்தால் நலமாக இருக்கும் என்று எண்ணினுர். ஏனையோரும் இவ்வாறே கூறியும் இருக்கிறுர்கள். ஒருமுறை ஒரு போதனு முறைப் பாடசாலைத் தலைமையாசிரியர் இவருடைய பேச்சுரையைக் கேட்டுவிட்டு ‘ இவர் வழக்கறிஞர் அல்ல, ஒரு போதகாசிரியர், தவறுதலாக வழக்கறிஞர் என்று பெயர் சாத்திக் கொண்டிருக் கிருர் ’ என்ருர்.

இதற்குக் காரணம் என்ன ? முன்னுளிலே பள்ளியில் சேர்ந்த பிள்ளைகள் ஒவ்வொரு வகுப்பாகத் தேரிச் செல்வார்களே யன்றி ஏன் படிக்கின்ருேம் என்று சிந்திப்பதில்லை, ஆராய்வதில்லை. பி. ஏ. ஆனதும் கணக்குப்பிள்ளை, பணமிருந்தால் சட்டப் படிப்பு, பிறகு வக்கீல், இந்த இரண்டும் தான் தெரியும். இந்த நிலைமையில் இராமச்சந்திரனுரும் வழக்கறிஞ ரானுர். இல்லாவிடில் பௌதிக நூலுக்கும் சட்டத் திற்கும் என்ன தொடர்பு இருக்கிறது ? இந்த நிலைமையில் ஏற்பட்ட தொழிலில் நிபுணத்துவமோ, வெற்றியோ காணப்பெறுமா ?

1912 ல் தொழில் தொடங்கியதும் ஊரில் மாறி மாறி நச்சுச்சுரத் தொத்து நோயும் வரத் தொடங்

கியது. ஆகவே தொழிலிலே முதல் பத்து வருடங்கள் தேர்ச்சியே இல்லை. ஆனாலும் குடும்பம் வெகு நிம் மதியாக நடைபெற்றது. நச்சுச் சுரம் வருங்காலங் களில் எல்லாம் வனவாசம் போகவேண்டி வந்தது. இரண்டு வருடங்களுக்கு ஒரு முறை ஊர்ப் புறங் களில் பங்களாக்களுக்குச் சென்று வசிக்கவேண்டி வந்தது. அந்தக் காலங்களில் கலைப் படிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் வாய்ப்பு கிடைத்தது. ஒரு ஆண்டு வான நூலைத் தானே வானை நோக்கிக் கொண்டே ஆராய்ந்து தெரிந்து கொண்டார். வான மண்டலப் பெயர்களை ஆங்கிலத்திலும் வடமொழியிலும் தெரிந்து கண்டு கொண்டிருந்தார்.

1915-ல் தகப்பனார் சிவபெருமான் திருவடி அடைந்தார். அதற்குச் சிறிது முந்தி இராமச்சந்திர னுருக்கு ஒரு மகளும் பிந்தி ஒரு மகனும் உதித்தார்கள். தகப்பனார் இருந்தபோதே பேரன் உதித்திருந்தால் அவர் மனம் திருப்தி அடைந்திருக்கும். ஆனால் அப் பாக்கியம் கிடைக்கவில்லை. நாளடைவில் அவருடைய குடும்பமும் பெருகிக்கொண்டே வந்தது. ஆனால் குடும்பத்தொல்லை பெரிதாக இருக்கவில்லை. தன் குடும்பத்தைப் பற்றி மாத்திரம் அவர் கவனிக்க வேண்டி இருந்ததினால் தொல்லை மிகக் குறைவுதான். சகோதரர்கள் உட்பட்ட முழுக்குடும்பத்தைப் பற்றிய சிந்தனை மேற்கொண்டிருந்தால் தொல்லை மிகுதியாக இருந்திருக்கும் அல்லவா? அதை அவர் கொள்ள வில்லை. அதனால், பிற்காலத்தில் பெருத்தபாதகம் ஏற்பட்டது. அதைப் பற்றி அவர் கவலைப்படவே யில்லை.

## 5. குலச் சேவையும் கல்விச்சேவையும்

இராமச்சந்திரனர் தொழிலில் அமர்ந்த காலத்தில் அவரது குலத்தார் இருந்த நிலைமை கேவலம் என்றே கூறவேண்டும். கைத்தொழில் செய்பவர்களே நூற்றுக்கு 99 பேர்கள். மீதி ஒருவர்தான் வர்த்தகத்தில் ஈடுபட்டவர் எனலாம். வர்த்தகர்கள் நெசவாளிகளுக்கு நூலும் பட்டும் சரிகையும் தருவார்கள். நெசவாளிகள் நெய்து துணியை வர்த்தகர்களிடம் ஒப்புவித்துக் கூலி பெற்றுச் செல்வார்கள். கோவையிலே மராட்டிய நாடுகளில் செலவாகும் உருமால்கள் பேட்டாக்கள் சேலைகள் நெய்யப்பட்டன. உயர்ந்த தினுசுகளும் உண்டு. நன்ருக நெய்தால் ஒரு தறிக்காரனுக்கு நாள் ஒன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் கூலிகிடைக்கும். ஆகவே, கோவை நெசவாளி கிராமத்து நெசவாளியை விட மேல்நிலையில் இருந்தான். வீடுவாசல் பெற்றிருந்த நெசவாளியின் பொருளாதார நிலை சுமாராக இருந்தது. அவைகள் இல்லாமல் வெறும் கூலிக்கு வேலைசெய்த நெசவாளியின் நிலை கேவலம் ஆக இருந்தது. வர்த்தகர் நிலை நன்ருக இருந்தது. அவர்களே கோவை நகரில் ஏனைய வகுப்பார்களை விட நல்ல செல்வாக்கில் இருந்தார்கள். இதற்கு வடநாட்டு வர்த்தகமே காரணம் ஆகும். வடநாடுகளுக்குப் பணியாட்களை அனுப்பி ஊக்கத்தோடு தொழில் செய்ததே இவர்களுடைய மேம்பாட்டிற்கு அடிப்படையாகும்.

தொழிலாளிகளுடைய நிலையும் மற்ற வகுப்பார்களைக் காட்டிலும் நல்லதாக இருந்த போதிலும் ஒன்றிரண்டு பழக்கவழக்கங்களிலே அவர்களுடைய நிலைமை உயர்வானதென்று கூறமுடியாது. ஒன்று,

குடி என்ற பழக்கம், மற்ருென்று படிப்பின்மை என்ற குறைவு. குடியை நிறுத்துவதற்குப் பல தடவை கட்டுப்பாடுகள் முயலப்பட்டன. படிப்பின்மை போக்குவதற்கும் வழிகள் தேடப்பட்டன. நகரப் பள்ளிகளில் இலவசச் சம்பளம் நிறுவப்பட்டது. பெண்களுக்கு என்று ஒரு பாடசாலை நிறுவப்பட்டது. தெப்பக்குளத் தெருவில் ஒரு வெளியிடத்தில் சாரதா பாடசாலை கட்டப்பட்டது. அதற்கு உதவி மாமனுர் குடும்பத்தில் தரப்பட்டது. மாதச் செலவிற்குக் குலப் பெருமக்கள் பொருளுதவி செய்தார்கள். இராமச் சந்திரனுரே அந்த நிலையத்திற்குச் செயலாளராக இருந்து நடத்தி வந்தார். 1914 ல் தொடங்கிய பாடசாலை மூன்று ஆண்டுகளுக்குள் 200 மாணவிகள் கற்கும் பெரிய பாடசாலை ஆயிற்று. அப் பாடசாலை இன்னமும் நடந்து வருகின்றது. மேலும் தேவாங்கக் கல்விச் சங்கத்தார் ஒரு இரவுப் பாடசாலையும் உபகாரச் சம்பளத்திட்டமும் வகுத்து வைத்தார்கள். அக்காரியங்கள் எல்லாம் இவராலேயே முன்னேறின. தேவாங்கச் சிறுவர் சபையின் வாரக் கூட்டங்களும் கல்விச் சேவைகளாக இருந்தன. ஆண்டுதோறும் பரிசு விழாக்களும் நடைபெற்றன. இவைகளினுல் ஊக்கம் பெருகிற்று.

என்ருலும் குலத்தில் உயர்தரப் படிப்பு மிகக் குறைவாகவே இருந்தது. இராமச்சந்திரனுர் தொழில் தொடங்குகையில் அவர் ஒருவரே பட்டம்பெற்ற கல்வி யாளர். அவரைத் தவிர வெகு சிலரே மெட்ரிகுலே ஷன்வரைப் படித்திருந்தார்கள். செல்வவான்களும் கல்வியில் ஊக்கம் காட்டவில்லை. ஆனுல் இளைஞர் சங்கம் ஏற்பட்டதின் காரணமாகப் பல இளைஞர்கள்

மேல்படிப்பில் ஈடுபட்டார்கள். இப்போது ஆராய்ந்து பார்த்தால் இக் குலத்தில் மக்கள் அடைந்திருக்கும் உயர்ந்த கல்வி நிலை வேறு இடத்துக் குலமக்கள் அடையவில்லை என்றே கூறலாம். இப்போது பலபேர்கள் பட்டம் பெற்றும் பல தொழில்களில் ஈடுபட்டிருக்கிறார்கள். இரண்டு பெண்மணிகளும் B. A., L. T. தேறி ஆசிரியர்களாக இருக்கிறார்கள். மற்றும் பல பெண்மணிகள் ஆங்கிலக் கல்வியும் தமிழ்க் கல்வியும் பெற்றுத் தங்கள் குடும்பங்களைச் சிறப்பிக்கிறார்கள். இவர்களில் பலபேர் தேவாங்க சங்கத்தார் அளித்த உதவியால் படித்தவர்கள் என்று சொல்லக் கூடும்.

ஒரு குலத்தின் முன்னேற்றம் மற்ற குலத்தாரோடு இணக்கம் கொண்டு ஒத்துழைத்துப் பல பொது இயக்கங்களில் ஈடுபடுவதினாலேதான் வெற்றியடையக்கூடும். இதனைக் கருதி கோவையில் நடந்த பல பொது இயக்கங்களில் சேர்ந்து உழைக்கத் தொடங்கினார் இராமச்சந்திரனார். இதற்கு அடிகோலினது இவருடைய சிறிய தகப்பனாரே ஆவர். 1894 முதலே அவர் தேசிய (காங்கிரசு) மகாநாடுகளில் கலந்துகொண்டு சென்னை கல்கத்தா முதலிய இடங்களில் நடந்த மகாநாடுகளுக்குச் சென்றிருந்தார். கோவை மாகாண மாநாட்டிலும் கலந்து கொண்டிருந்தார். அதை ஒட்டி இராமச்சந்திரனாரும் 1914-லிலும் பின்னும் நடந்த கோவை அரசியல் மாநாடுகளில் கலந்து கொண்டார். 1918 ல் பிராமணர் அல்லாதார் மகாநாடு ஒன்று நடை பெற்றது. அதிலும் சேர்ந்துழைக்க வேண்டிய நிலைமை வந்திருந்தது. குலத்தில் பல செல்வவான்கள் இம் மகாநாடுகளில் கலந்து கொண் டிருந்தார்கள். இதனாலே குலமக்களுக்கு

விரிவான நோக்கம் ஏற்படச் சமயம் வாய்த்தது. இவ்விதமாக அரசியல் கூட்டங்களில் முதலில் ஈடுபட்டிருந்தும் அந்த இயக்கங்களில் மிகுதியாக அவர் மனம் நாடவில்லை. கல்வித்துறையே அவரை மிகுதியும் இழுத்தது.

## 6. நகரசபையும் நாட்டுச் சபைகளும்

கோவையில் வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்ட இரண்டு மூன்று ஆண்டுகளுக்குள்ளேயே நகரசபையில் தான் குடியிருந்த பேட்டையில் அங்கத்தினர் பதவி காலி ஆயிற்று. அந்தப் பதவிக்கு நிற்கும்படி வேண்டுதல் வந்தது. தான் மிகவும் இளவயது என்று எண்ணினது உண்டு. இருந்தாலும் அதற்கு நிற்கும்படி குடும்பத்தாரும் பொதுமக்களும் வேண்டிக் கொண்டார்கள். அதற்கு முந்தி பல ஆண்டுகளாகவே சிறிய தகப்பனார் அதில் அங்கத்தினராக இருந்தார். அச்சபையில் அவர் முடி சூடா மன்னர் என்று பெயரும் பெற்றிருந்தார். தேர்தல் நடந்தது. எதிரிக்கு ஒரு வாக்கும் இவருக்கு 30 வாக்குகளும் கிடைத்தன. இந்த வெற்றியால் சபையில் ஒரே குடும்பத்தில் இரண்டுபேர் அங்கத்தினர்கள் ஆனார்கள். மற்றும் பந்துக்களிலேயே மூன்று நான்கு பேர்களும் இருந்தார்கள். நகரசபை சேர்ந்தவுடன் மிகவும் ஊக்கத்துடன் பொதுமக்கள் சேவையில் ஈடுபட வேண்டி வந்தது. 1918 - ம் ஆண்டிலே உதவித் தலைமைப் பதவியும் சில மாதங்கள் ஏற்றுக் கொள்ளவேண்டி வந்தது. அதுமுதல் ஒவ்வொரு தேர்தலிலும் போட்டியிட்டே வெற்றிபெற வேண்டிவந்தது. ஏனெனில் அக்

காலங்களில் நகரசபையில் அபிப்பிராய வேற்றுமைகள் பல இருந்தன. இருகட்சிகள் ஏற்பட்டிருந்தன. இருந்தாலும் பொது மக்கட்சேவையில் நகரபரிபாலனத்தை ஒட்டி நடுநிலைமையே வகித்து வந்தார். படிப்பு, சுகாதாரம், ஊர்ப்பெருக்கம் முதலிய சங்கதிகளில் மிகவும் ஊக்கதோடு பாடுபட்டுவந்தார். ஊரில் நல்ல பெயரும் கிடைத்தது. இரண்டு மூன்று முறை தலைவருக்கு உதவியாக பதில் தலைமை (Chairman - delegate) என்ற முறையில் வேலை செய்து வந்தார். நகரசபையின் நிமித்தமாக தலத்தாபன மாநாடுகளுக்குப் பிரதி நிதியாகச் சென்று வேலை செய்ததுண்டு. கோவை, மங்களூர் முதலிய இடங்களில் நடந்த தலதாபன மாநாடுகளில் அவர் ஈடுப்பட்டதுண்டு. மேலும் நகரசபைக்காக பல சங்கங்களுக்குப் பிரதிநிதியாக வேலைபார்த்ததுண்டு. ஜில்லாக் கல்விச் சங்கம், மத்தியதரக் கல்விச்சங்கம், கலால் ஆலோசனைச்சங்கம், வைத்திய ஆலோசனைச் சங்கம் முதலியவைகளில் கலந்து கொண்டார். இவ்வித வேலைகளில் ஈடுபட்டு 1928-ல் உத்தியோக தோரணைக்குச் சென்றபோது நகரச்சபையை விட்டு விலக வேண்டி வந்தது. நகர சபையில் இருந்தபோது ஞாயிற்றுக் கிழமை தோறும் தன் பேட்டை முழுதும் சுற்றி மக்களின் குறைகளைக் கேட்டு அவ்வப்போது நிவர்த்தி செய்து வந்தார். குடிகள் ஒவ்வொருவரையும் நேரில் கண்டு பேசி அறிமுகம் செய்துகொண்டதுண்டு.

கோவை தாலூக்காச் சபையிலும் கோவை ஜில்லா அங்கத்தினராக இருந்து நாட்டிற்குப் பணி செய்து வந்தார். ஜில்லா சபையிலிருந்து சென்னைப் பல்கலைக் கழகத்திற்குப் பிரதிநிதியாகச் சென்று

கலைகளுக்காகத் தொண்டு செய்ததுண்டு. எல்லாவற்றிலும் சிறப்பாக ஜில்லாக் கல்விச் சங்கத்திற்குத் தெரிந்தெடுக்கப்பட்டு அதன் உதவித் தலைமை ஒரு முறையும் தலைமை நான்கு முறைகளும் வகித்துக் கல்வி முறையையே சீர்திருத்தி வைத்தார். இந்த நிலைமையில் ஜில்லாவில் தொடக்கக் கல்வி மிகவும் மேம்பாடு அடைந்தது. தலைமை ஏற்றுக் கொண்டபோது வெகு குறைவான பாடசாலைகளும் பிள்ளைகளும் இருந்தார்கள். அரசியல் உதவி அரை லட்சம் ரூபாய்தான் இருந்தது. கல்வியை ஊக்கிவிட்டதில் இரட்டை மடங்கு பாடசாலைகளும் பிள்ளைகளும் ஒன்றரை லட்சம் உதவியும் ஆயின. இதனை அரசியலார் நன்கு உணர்ந்து 1930-ல் ராவ் சாகேப் பட்டமும் 1938-ல் ராவ்பகதூர் பட்டமும் வழங்கினார்கள்.

ஏழை உபாத்தியாயர்களின் நிலைமை உத்தேசித்து அடிக்கடி சபைகள் கூட்டி அவர்களின் பொருளாதார நிலை உயர்த்தப் பெரும்பாடு பட்டனர். உபாத்தியாயர் சங்கங்களில் பேசிப் போதனை முறையைச் சீர்திருத்த முயன்றார். சீர்திருத்த வகுப்புக்களையும் கண்காட்சிகளையும் ஏற்படுத்திப் பரிசுகளையும் வழங்கினார். போட்டிப் பரீட்சைகள் வைத்துப் பரிசுகள் கொடுக்கப்பட்டன. அமைச்சர், பகுதித் தலைவர் (டைரெக்டர்) முதலிய பெரியவர்களை அழைப்பித்து உபாத்தியாயர்களின் நிலைமையை எடுத்துக் கூறி அனுகூலங்களைத்தேட முயன்றார். சின்னஞ் சிறு பாடசாலைகளால் பயன் மிகக் குறைவு என்றறிந்து பெரிய பாடசாலைகளை வைக்கவும் ஆசிரியர்களுக்கு விடுதிகளை அமைக்கவும் மிகவும் பாடுபட்டார். கோவை

ஜில்லாவில் மட்டும் அல்லாமல் சேலத்தில் தாரமங்கலம் தருமபுரி முதலிய இடங்களில் நடந்த மாநாடுகளில் தலைமை வகித்துக் கல்வித் திட்டத்தைச் சீர்படுத்த முயன்றார். இவர் தொண்டைப் பாராட்டிக் கல்விச் சங்கத்து இறுதிக் கூட்டத்தில் இவருடைய படமும் திறந்து வைக்கப்பட்டது.

மேலும் கோவை ஜில்லாவில் ஏற்பட்ட பொது நிலையங்கள் சபைகள் முதலியனவைகளில் எல்லாம் இவருக்கு ஒரு பங்கு இருந்தது. ஜீவ இம்ச நிவாரண சங்கம், விடுதலை பெற்ற சிறையாளர் உதவிச் சங்கம், குழந்தையர் பாதுகாப்புச் சங்கம், பிரசவ உதவிச் சங்கம், சாரணர் இயக்கச் சங்கம், செஞ்சிலுவைச் சங்கம் முதலிய சங்கங்களில் அங்கம் வகித்ததன்றி நிர்வாகத்திலும் கலந்து கொண்டிருந்தார். வைத்திய சாலைக் குழு, சிறைச்சாலை இயக்கம் இவைகளில் வேலை செய்ததன்றி சிறையாளர்களுக்குச் சமய போதனை மூன்று ஆண்டுகள்வரை செய்துவந்தார். அப்போது சிறந்த அரசியல் கைதிகளும் இவருடைய பேச்சுக்களைக் கேட்டிருக்கின்றனர். சிறப்பாகத் திருத் தொண்டர் சரிதங்களை அவர்களுக்குப் போதித்து வந்தார். சில நாள் ஜில்லா சுகாதாரச் சபையில் செயலாளர் ஆக இருந்து ஒரு சுகாதாரக் கண் காட்சியும் நடத்தினர். சுகாதார வார விழாக்களிலும் பங்கு எடுத்துக் கொண்டதுண்டு. 1926-ல் ஏற்பட்ட வெள்ளக் கொடுமையை நீக்க ஒரு வெள்ள நிவாரணச் சங்கம் ஏற்படுத்தி அதில் செயலாளராக இருந்து பெருந் தொண்டு செய்தார். சிறப்பாகப் பவானிக் கரையில் இருந்த சிற்றூர்களுக்குப் பேருதவி செய்ய வகை தேடினர். மலையாளத்தில் மாப்பிள்ளைமார்

கலகம் நடந்த காலத்தில் அகதிகளாக ஓடிவந்து கோவை ஜில்லாவில் அடைக்கலம் புகுந்த ஏழைகளுக்குக் கஷ்ட நிவாரணம் செய்யச் சபை ஏற்பட்டதில் அதன் செயலாளராக இருந்து தொகை சேர்த்து உதவி செய்திருக்கிறார். மலைச்சாதியார்களுக்கும் ஒடுக்கப் பட்ட மக்களுக்கும் உதவி புரிவதில் பங்கு எடுத்துக் கொண்டார். அவர்களுக்குரிய சங்கங்களிலும் மகா நாடுகளிலும் வேலை செய்திருக்கிறார். அதற்காகப் பல கிராமங்களும் மலை ஊர்களும் சென்றதுண்டு. இவ் விதமான சேவை வேலை எப்போதும் செய்வதில் மிகுந்த ஊக்கம் கொண்டிருந்தார்.

## 7. பொது மகாநாடுகளும் குலமகா நாடுகளும்

நகரசபைப் போட்டிகளில் கலந்து கொள்ள வேண்டிய அவசியம் நேரிட்ட காலங்களில் தேசீய சபையின் சார்பாக நிற்கவேண்டி வந்தது. அவருக்கு அரசியல் துறையில் மிகுதியாக ஈடுபாடு இல்லை என்று முன்னமே கூறப்பட்டது. இருந்தாலும் போட்டிக்காக அரசியல் கட்சி புகவேண்டி இருந்தது. நகர தேசீயச்சபையில் திரு. R. K. S. செட்டியார் தலைவராகவும் இவர் துணைத் தலைவராகவும் தெரிந் தெடுக்கப்பட்டார்கள். பல முறைகளில் தேசீய மகா நாட்டிற்கு இவர் பிரதிநிதியாகச் சென்றார். அவ் வாறு சென்ற சபைகள் காகிநாடா (1923), பெலகாம் (1924), கான்புரி (1925), சென்னை (1927) முதலியன. இந்த மகா நாடுகளுக்குச் சென்ற காலத்தில் இவருடைய அத்தியந்த நண்பர்கள் உடன் சென்றதி னால் மிகுந்த பயன் ஏற்பட்டது. இந்தியா முழுவதும்

சுற்றி மக்களுடைய நிலைமைகளைக் கண்டு மகிழும் வாய்ப்பும் அப்போது ஏற்பட்டது. மேலும் அங்கங்கே உபன்னியாசங்கள் செய்யும்படியான கைங்கரியமும் கிடைத்தது. பல பெரியார்களின் பரிச்சயமும் கிடைத்தது. பெலகாமில் காந்தியடிகளின் காட்சியும் அருகு இருந்து பேச்சுக்களைக் கேட்கும் வாய்ப்பும் கிடைத்தன. 1928க்குப் பிறகு அரசியல் துறையை அறவே நீங்கவேண்டி வந்தது.

அதே காலங்களில் மக்கட் சேவை செய்து வந்த படியால் பொது ஜன ஊழிய மகாநாடுகளுக்கும் சென்று கலந்து கொண்டார். 1922-ல் பம்பாயில் நடந்த பொதுமக்கள் ஊழியர் மகாநாட்டிற்குக் கோவை நகரப் பிரிதிநிதியாகச் சென்றார். அந்த ஆண்டில் திருமதி அன்னை வசந்தியம்மையார் தலைமை வகித்தார்கள். அப்போது அந்தச் சபையில் ஈடுபட்டு அதனைக் குறித்து ஒரு நீண்ட கட்டுரையும் எழுதி மகாஜன நேசனில் பதிப்பித்தார்.

பிறகு சென்னையில் நடந்த பொதுமக்கள் ஊழிய மாநாட்டிலும் கலந்து கொண்டும் பேசியிருக்கிறார். அவைகளை யன்றிப் பல கல்விச் சங்கங்களிலும் கல்வி மாநாடுகளிலும் கலந்து கொண்டதுண்டு.

இளவயதிலிருந்தே தன்குலச்சேவையில் ஈடுபட்டு வந்த செய்தி முன்பு கூறப்பட்டது. 1925 - ல் சென்னையில் அகில இந்திய தேவாங்கர் மாநாடு கூடிற்று. சேலம் வெங்கடப்ப செட்டியார் தலைமை வகித்தார். சர். பிட்டி. தியாகராஜ செட்டியார் முதலியோர் அதனை ஆதரித்தார்கள். அப்போது இவர் அதில் பெரும்பளுவை ஏற்றுக்கொண்டார். அந்த வகையில் சபை இனிதாகவும் வெற்றியுடனும் முடி

வடைந்தது. இரண்டாவது மகாநாடு கோவையில் 1929 ஜூலை மாதத்தில் நடைபெற்றது. அதற்குச் செயலாளராக இருந்ததினால் முழுப் பொறுப்பும் ஏற்றுக் கொள்ள வேண்டி வந்தது. அக் கூட்டம் மிகப் பெரியது. எல்லா ஜில்லாக்களிலிருந்தும் பெரும் பான்மையான மக்கள் வந்தார்கள். அக்காலத்து அமைச்சர்களும் வந்தார்கள். அது P. T. குமாரசாமி செட்டியார் தலைமையில் நடந்தது. கோவைக் குலத் தார்கள் எல்லாரும் ஒற்றுமையுடன் பாடு பட்டார் கள். அப்போது இளைஞர் சபை, மாதர்சபை, வித்து வான்கள் சபை முதலியனவும் கைத்தறிக்கண் காட்சி யும் நடைபெற்றன. இக் கூட்டம் மிகவும் வெற்றி யாக முடிந்தது. அச்சபைக்கு வசூலான 8000ல் 5000 போக 3000 மீதப்படுத்திக் குலச் சிறுவர்களுக்கு உதவிச் சம்பள நிதி ஏற்படுத்தப்பட்டது.

பிறகு அதே ஆண்டு இறுதியில் தேவாங்கர் குல நிலைமையை அறியவேண்டி, வேடபாலம், பெடன, பெத்தாபுரம், குண்டக்கல், உரவகொண்டா முதலிய இடங்களுக்குச்சென்று தம் குலமக்களுக்கு முன்னேற் றத்தைக்கருதிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். மற் றொருமுறை உப்பாடா (கோதாவரி)வில் நடந்த கைத் தறி நெசவாளர் மாநாட்டில் தலைமை வகித்து நெசவா ளர்களின் குறைகளை நீக்க முயற்சிகள் எடுத்துக் கொண்டார். இன்னும் ஒரு முறை 1933ல் பாருவா வில் (கஞ்சம்) தேவாங்கர் சங்கத்தின் ஆண்டு நிறை விற்குச் சென்று சோம பேட்டை, இச்சாபுரம், பரம புரம், கடகம் முதலிய ஊர்களில் இருந்த தேவாங்கச் சங்கங்களில் தலைமை வகித்துப் பேசினார். அப்போது பல வரவேற்புகள் நடந்தன. நான்காம் முறையாக,

1935-ல் கிருஷ்ணா, கோதாவரி, விசாகப்பட்டணம், கஞ்சம், கடகம், கல்கத்தா முதலிய இடங்களுக்குச் சென்று குலமக்களுக்குச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். காங்கிரசு காலங்களில், காகிநாடா, பெலகாம், கோலாப்பூர் முதலிய இடங்களில் இருந்த தேவாங்கச் சங்கங்களில் ஈடுபட்டார். தமிழ் நாட்டிலும் அருப்புக் கோட்டை, சின்னாளப்பட்டி, தேவாரம், உறையூர் முதலிய சங்கங்களில் தலைமை வகித்து முன்னேற்றத்தைப் பற்றிப் பேசியிருக்கிறார். இந்த வகையில் குல சேவை செய்யப்பட்டது.

## 8. சுற்றுப்பயணமும் கோவில் வழிபாடும்

இளவயது முற்கொண்டே நாடுசுற்றி அதன் இயற்கை செயற்கை அழகுகளைக் கண்டும் மக்களின் நடையுடை பாவனைகளை ஆராய்ந்தும் அறிவைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்ற பேராவல் அவருக்கு இருந்தது. அப்போது புனித நிலையங்களைக் கண்டு அங்குள்ள சிற்ப ஓவியங்களைக் காண வேண்டுமென்ற ஆர்வமும் மிகுந்திருந்து. இந்த ஆவல் 1903 - 4ல் கோவையில் விஷசுரம் ஏற்பட்டபோது பாண்டி நாட்டிற்குச் சில மாதங்கள் குடி சென்ற காலத்திலேயே தொடங்கியது. பிறகு சென்னையில் கல்லூரிகளில் கற்ற காலத்திலும் அருகில் இருந்த புனிதத் தலங்களைக் காணும் வாய்ப்பும் கிடைத்தது. அவ்வாறு காணும் போது அவர் குறித்துக் கொண்ட குறிப்புகள் இதுகாறும் இருக்கின்றன. பிறகு தொழிலில் அமர்ந்த காலத்தில் சிற்சில இடங்களுக்குச் சென்றார். மக்கட் சேவை மாநாட்டிற்குச் செல்ல

முயன்று முதன் முதலாக 1922ல் பம்பாய் சென்று அங்கு இருக்கிற அற்புதங் கண்டு மகிழ்ந்தார். தேசீய நாடுகளுக்குச் சென்றபோது வடநாட்டுச் சிறந்த புனிதத் தலங்களைப் பார்த்தார். அப்போது வடநாட்டுப் பேரூர்கள் முழுதும் தனது நண்பர்களுடன் கண்டு ஆனந்தித்தார்.

பாம்பாயில் ஊர்த்தேவதையான மகாமாம்பா கோயில் அந்நகரத்துக் கடைத் தெருவின் நெருக்கடியில் இருந்த போதிலும் கோயில் மிகத் தூய்மையாக வைக்கப்பட்டிருந்ததும் தொழுதிட வருவோர் நிச்சப்தமாக இருந்து வழிபடுவதையும் கண்டு மிகுந்த வியப்படைந்து தென் நாட்டுக் கோயில்களும் இவ்விதமாகவே ஏன் இருக்கக்கூடாது என எண்ணினதுண்டு. 1924 ல் பெல்காம் சென்றபோது 2200 மைல்கள் தூரம் 220 ரூ. செலவு செய்து 22 நாட்கள் சென்றது குறிக்கத்தக்கது. அப்போது ஹம்பி, கதகு, பாதாமி (வாதாபி), பிஜாபுரி, சோலாப்பூர், பூனு, கோலாபூர், கோவா, கோகர்ணம், மங்களூர் முதலிய ஊர்களுக்குச் சென்று சிறந்த ஆலயங்களையும் பண்டைச் சிற்பங்களையும் கண்டு வந்தது ஒருகாலும் மறக்கத்தக்கதல்ல. அந்த யாத்திரையில் புகைவண்டி, விசைவண்டி, கப்பல், படகு, கால்நடை முதலிய எல்லாவித ஊர்திகளையும் பெற்று அவைகள் பயன் படுத்தப்பட்டன. காகினடா சென்றபோது கிழக்குக் கரை ஆந்திர நாட்டூர்களைக் காண வாய்ப்பு ஏற்பட்டது. கான்புரி சென்றபோது பூரி ஜகந்நாதம், கல்கத்தா, காசி, பிரயாகை, அயோத்தியா, லக்நௌ, ஆக்ரா, டெல்லி, கயா முதலிய ஊர்களைக் கண்டு அங்கே ஆலய வழிபாடுகள், நதிகளில் நீராடல்,

தாஜ், முதலிய அழகிய கட்டடப் பார்வை முதலியவைகளை அனுபவித்தது உண்டு. கல்கத்தாவில் காளியின் உக்கிரக உருவமும், கயாவில் புத்தரின் போதி மரமும், பிண்டம் வாங்கும் விஷ்ணு பாதம், பல்குணி நதி, வடவிருக்ஷம் முதலியவைகளும் பிரயாகையில் திருவேணிக் கூடலும் கோட்டையும் கருப்புச் சிலைகளும், ஆனந்தபவனமும், காசியில் விசுவேசுரர் ஆலயமும், அயோத்தியில் இராம சனனமும் லக்நௌவில் கலகச் சின்னங்களும், மதுராவில் கண்ணன் பிறப்பிடமும், கோகுலத்தில் விளையாட்டிடங்களும், ஆகராவில் தாஜ்மகாலும், டெல்லியில் கோட்டை கொத்தளங்களும் பார்வை இடப்பட்டன. ஆகவே அரசியல் மகா நாடுகளுக்குச் சென்றபோது காட்சிகளும் வழிபாடும் நடந்த சங்கதி குறிப்பிடத் தக்கது.

நாடுகளைக் காணவேண்டும் என்ற ஆர்வம் ஒன்றே கொண்டு வேறு யாத்திரைகளும் செய்யப்பட்டன. 1927 ல் மேற்கே மலையாள நாடுகளுக்குச் சென்றது அங்கிருக்கும் இடங்களைக் காணவேதான். பலதடவைகளில் குடும்பத்தோடும் சென்றதுண்டு. சங்கரர் அவதாரத் தலம் ஆன காலடி, திருச்சூர், ஆலவாய், திருப்புனத்துறை, வைக்கம், கொச்சி, ஆலப்புழை, கொல்லம், வற்கலை, திருவனந்தபுரம், நாகர்கோயில், குமரி, நாங்குநேரி, நெல்லை, குற்றாலம், பாபநாசம் இவைகளைக் கண்டது அத்தன்மையானது.

பிறகு இலங்கைக்குச் சென்று ஈழ நாட்டுத் திருத்தலங்களைக் கண்டு மகிழ்ந்தும், யாழ்ப்பாணம், அநுராதபுரம், கொழும்பு, கண்டி, நூரளை முதலிய இடங்

களைக் கண்டு வியந்தும் வந்த துண்டு. இயற்கை வனப்பை ஈழ நாட்டில்தான் காண வேண்டும். பண்டைச் சிற்பங்களை அநுராதபுரம் சுவீகரித்துக் கொண்டிருக்கிறது. உலகத்திலேயே பெரிய துறைமுகத்தை திருக்கோணமலை அடக்கிக் கொண்டிருக்கிறது. மிகச் சிறந்த பூங்காவனத்தைப் பேராதனை வளைத்துக்கொண்டிருக்கிறது. ஜவ்வரசிமரம் கர்ப்பூரச் செடி இலவங்கப்பட்டை இங்கேதான் கண்டது. கீரிமலையில் உள்ள அழகிய தடாகம் வேறு எங்கு கிடைக்கும்? இலங்கை யாத்திரை இரண்டு வாரம் செய்ய வேண்டி வந்தது. அப்படிச்செய்தும் அது பூர்த்தியாக வில்லை.

கன்னடம், மைசூர் இராயலு சீமை, புதுச்சேரி, தமிழ்நாடு இவைகளில் செய்த யாத்திரைகளை விரிவாகக் கூறவேண்டியதில்லை. இவைகளாலே ஆலய வழிபாடு மிகுதியும் வாய்த்தது.

## 9. கூட்டுறவு இயக்கமும் உறுதிச்சங்கப் பணியும்

கூட்டுறவு இயக்கம் நாட்டில் சென்ற இருபது ஆண்டுகளாகவே விருத்திபடையத் தொடங்கிற்று. அரசியலார் அதனை கைதூக்கி விடுகின்றனர். பொது மக்களில் பலபேர் அதில் ஈடுபட்டு வருகின்றனர். பாங்குகள், பண்டகசாலைகள், வீடு நிர்மாணம், கைத்தொழில் சங்கங்கள் இவைகள் இந்நாட்டில் சிறப்பாக வளர்ந்தன. நகரசபையில் சேர்ந்தகாலத்தில் அதன் விளைவாகக் கூட்டுறவு இயக்கத்தில் சேரவேண்டி வந்தது. நேசவாளர்கள் கூட்டுறவுச்சாலை வைக்க

வேண்டும் என்ற கோரிக்கையை உத்தேசித்து 1920ல் ஒரு நெசவாளர் கூட்டுறவு சங்கம் அமைத்து அதன் செயலாளராக இருக்கவேண்டி வந்தது. அது சரியாக நடைபெறவில்லை. 1930 - 31ல் நெசவுத் தொழில் மிகவும் நெருக்கடி அடைந்தது. அதனை மீட்பதற்காக மீண்டும் 1930ல் மற்றொரு சங்கம் நிறுவி அதன் தலைமை வகிக்கவேண்டி வந்தது. அச் சங்கம் இன்னும் இருக்கின்றது. பண்டக சாலைச் சங்கத்தில் செயல் குழுவில் சேர்ந்து பல ஆண்டுகள் நடத்தி வந்தார். வீட்டு நிர்மாணச் சங்கத்தில் பல ஆண்டு களும் பால்விற்பனை சங்கத்தில் பல ஆண்டுகளும் ஈடுபட்டு வேலைசெய்து வந்தார். இந்த முறையில் கூட்டுறவைப் பெருக்கினதன்றிக் கூட்டுறவு மகா நாடுகளிலும் பலமுறை கலந்து கொண்டார். 1939ல் திருவானைக்காவில் நடந்த சென்னை மாகாண கைத் தறி கூட்டுறவு மா நாட்டில் தலைமை வகித்தும் மற்றொரு முறை ஆந்திர மாகாணக் கைத்தறி கூட்டுறவு நாட்டில் தலைமை வகித்தும் கூட்டுறவு இயக்கத்தில் ஈடுபட்டார்.

உறுதிச் சங்கம் என்பது இன்ஷ்யூரன்சு என்ற ஆங்கிலப் பெயரால் நாட்டில் நிலை பெற்று விளங்கு கிறது. தற்கால நாகரீக வாழ்வில் உறுதிதரல் இயக்கம் ஒரு இன்றி அமையாத இயக்கம் ஆகிவிட்டது. பின் காலத்திய சேம வாழ்விற்கு உறுதிதரல் இயக்கமே சிறந்தது. கோவையில் இந்தியா நல வுரிமை நிதிச் சங்கம் என்ற ஒரு சங்கம் இருந்தது. அதில் சேர்ந்து அதனைக் கைத்தூக்கிவிடும்படி, அச்சங்கத்தார் கேட் டுக்கொண்டதில் அவரும் இணங்கினர். அதின் வேலை யில் இறங்கினதும் அதன் தலைமைவகிக்க வேண்டி

வந்தது. சில நாளில் அதன்செயலாளர் இறந்துபோக இவரே அதற்குத் தலைவனும் செயலாளனுமாக இருக்கவேண்டி வந்தது. அப்போது பல இடங்களுக்குச் சென்று கிளைகளைத் தாபித்து பிரசார வேலைசெய்ய வேண்டிவந்தது. தமிழ்நாட்டில் மாத்திரமேயன்றி ஆந்திரநாட்டிலும் பிரயாணம் செய்து கிளைகள் ஏற்படுத்த முயற்சிகள் செய்யப்பட்டன. ஒருமுறை 1935–ல் வங்காளத்திற்குச் சென்று அங்கே கல்கத்தாவில் கிளைவ் தெருவில் ஒரு கிளை தாபிக்கப்பட்டது. அதன் செயலாளர் அப் பெரிய நகரத்திற்கு 20 மைல்தூரத்தில் உள்ள தொழிற்சாலைப் புறநகராகிய டிடாகர் என்பதில் வசித்த ஒரு ஆந்திர தேவாங்க வைத்தியர். அப்போது டிடாகரில் சில நாள் தங்கி அங்கு இருக்கும் 25,000 தேவாங்கர்களின் நிலைமையைக் குறித்து ஆராயும் சமயமும் வாய்த்தது. அவர்கள் எல்லாரும் கஞ்சம் விசாகப்பட்டினம் ஜில்லாக்களிலிருந்து குடியேறிச் சென்ற நெசவாளிகளே. அவர்கள் எல்லாம் சணல்நார் சாலைகளில் வேலையாட்களாகச் சேர்ந்திருந்தார்கள். வாரத்திற்கு மூன்றரை நாளே வேலை செய்யப்படும். கூலியும் $3\frac{1}{2}$ நாள் கூலிதான். ஆகவே அவர்கள் நிலை பரிதாபமாக இருந்தது. நடை, உடை, பாவனைகளும் மிகவும் கேவலம் ஆக இருந்தன. ஆனல் அவர்களில் ஒரு முதியவர் அவ் வேலையாட்களுக்கு ஏற்ற தலைவராக இருந்தார். அவரே ஒரு இரவு பாடசாலை ஏற்படுத்தி அதற்கு அதிகாரிகளின் உதவியும் தேடி வைத்திருந்தார். அவர் ஒரு தேவாலயத்தை முதலாளிகள் ஆக்கிரமிக்காமல் தடை செய்து காப்பாற்றினவர். அன்னர் இராமச்சந்திரருக்கு ஒரு வரவேற்பும் சிற்றுண்டி

விருந்தும் அளித்தார். அப்போது அங்கே ஒரு சொற்பொழிவும் நிகழ்த்தப்பட்டது. அப்பெரியவரே அவரை அழைத்துக் கொண்டு ஹூக்ளியைத் தாண்டி ஸ்ரீ இராமகிருஷ்ணாசிரமம் உள்ள புனிதத் தலமாகிய பேலூர் மடத்தையும் அப்பெரியார் வழிபட்ட தட்சிணேசுரர் ஆலயத்தையும் காட்டினார். அவர்களுடைய ஒத்தாசையினாலே உறுதிதரல் இயக்கமும் அபிவிருத்தி அடைந்தது.

உறுதி தரல் இயக்கத்தில் வேலைசெய்தபோது உரியா நாட்டைக் காணும் சந்தர்ப்பமும் கிடைத்தது. அந்நாட்டில் பரம்புரம், குருதா, பூரி, புவனேசுவரம் முதலிய இடங்கள் பார்க்கப்பட்டன. அங்கே ஆலயங்களின் சிற்ப வேலைகளும் வழிபாட்டு முறைகளும் ஆராயப்பட்டன. ஆபாசச் சித்திரங்கள் ஏன் உரியா நாட்டுக் கோயில்களில் ஏற்படுத்தப்பட்டனவோ கூற முடியவில்லை. அந்நாட்டு மக்களும் நடை உடைகளில் மிகத் தாழ்ந்து கிடக்கிறார்கள். கடவுள் வழிபாடு என்றால் உண்பதும் அழகுபடுத்திக் கொள்வதுமே கொள்கைகளாகக் கொண்டுள்ளார்கள். கடவுள் வழிபாட்டிலே சிறந்த பகுதிக்கு போகம் என்ற சொல் வழங்குவதே இந்த எண்ணத்தைத் தோற்றுவிக்கிறது.

உறுதிதரல் பொருத்தின மட்டில் இவருடைய தொடர்பு 1940 தோடு நின்றுவிட்டது. அறநிலையத் தொழில் கிடைத்தவுடன் இதனை விடவேண்டி வந்தது. உறுதி தரல் இயக்கத்தைக் குறித்த பல கட்டுரைகள் அவர் எழுதிக் கொங்குமலரில் வெளியிட்டுள்ளார். அவைகள் ஒரு நூலாக வெளிவந்தால் நலமாக இருக்கும்.

## 10. சங்கச் சேவையும் கொங்கு மலரும்

கோவையிலே பண்டிதர் திருச் சிற்றம்பலம் பிள்ளை யவர்களால் ஒரு தமிழ்ச் சங்கம் தாபிக்கப் பெற்றிருந்தது. அன்னார் காலமான பின்பு அச்சங்க மும் தொழில் செய்யவில்லை. 1915-ல் அன்னார் மாணுக் கரான திரு C. K. சுப்பிரமணிய முதலியார் வீட்டில் அதனை உயிர்ப்பிக்க ஒரு கூட்டம் கூடிற்று. அதற்கு இராமச்சந்திரனாரும் சென்றிருந்தார். அவரும் திரு. பிள்ளையவர்கள் மாணுக்கரே. ஆகவே அவர் அப் புதுப்பித்த சங்கத்திற்குச் செயலாளராகத் தெரிந் தெடுக்கப்பட்டனர். C. K. சு. அவர்கள் தலைவர் ஆனார். இச்சங்கம் சைவப் பிரசங்க சாலைக்கட் டிடத்தில் வைக்கப் பட்டது. ஒருநூலகமும் வாசக சாலையும் ஏற்படுத்தப் பட்டன. வாரந்தோறும் தவறாமல் சொற்பொழிவுகள் நடைபெற்றன. சில ஆண்டுகளுக்குப் பிறகு அக்கட்டடம் நகரசபை யால் எடுத்துக் கொள்ளப்பட்டது. பிறகு வேறொரு இடம் பெறப்பட்டது. அதில் 1928-ல் புதுக் கட்டடம் தொடங்கப்பட்டது. அதற்கு திரு. மருதா சலம் செட்டியார் குடும்பத்தில் நன்கொடை அளிக்கப் பட்டது. பிரசங்கமண்டபமும் ந. மருதாசலம் செட்டி யார் ஞாபகமண்டபம் என்றே பெயரிடப் பட்டது. தமிழ்ச்சங்கக் கட்டிடத்தை அப்போது அரசியல் மந்திரியாக இருந்த திரு. S. முத்தையா முதலியார் திறந்து வைத்தார். கல்லும் நடப்பெற்றது. அந்தத் தேதி 3 - 10 - 28 ஆகும்.

கோவைத் தமிழ்ச் சங்கச் செயலாளராக இராமச் சந்திரனார் பல பெரியார்களை அழைத்து அருமையான

பிரசங்கங்கள் செய்வித்தார். ஆண்டுதோறும் ஆண்டு விழாக்கள் தக்க பெரியார்களைக் கொண்டு நடப்பிக்கப் பெற்றன. திரு. ஞானியார் சுவாமிகள் 1936-ல் தலைமை வகித்து நடத்தினது ஒரு பெரிய வைபவமாகும். அந்த ஆண்டில் ஞானியார் சுவாமிகள் திருப்பேரூரில் ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் திருநாளின் போது நடக்கும் பேரவையில் தலைமை வகிக்க வந்திருந்தார்கள். மற்ற ஆண்டுகளிலும் திரு. இடையகோட்டைக் குறுநில மன்னர் போன்ற பல பெரியார்கள் ஆண்டு விழாத் தலைமை வகித்துள்ளார்கள்.

கோவைத் தமிழ்ச் சங்கத்தில் வாரப் பிரசங்கங்களேயன்றி மாணவர்களுக்குப் பள்ளிப் பாடங்களில் தமிழ்ப் பாடங்களை வகுப்புத் திட்டமாகக் கொண்டு பாடம் நடத்தப்பட்டது. அதனாலே அவர்கள் பரீட்சைக்கு பெருத்த உதவி கிடைத்தது. தமிழ்ச் சங்கப் பரிட்சைகள் வைத்துத் தேர்ந்தவர்களுக்கு நற்சாட்சித் தாள்களும் பரிசுகளும் வழங்கப் பெற்றன. தமிழ்ச் சங்க வெளியீடுகளாக ஆராய்ச்சி நூற்களும் வெளியிடப் பட்டன. அவ்வாறு வெளி வந்த நூல்களில் சிறுவர்களுக்குக் கடவுள் வணக்கச் செய்யுட்களும் இளைஞர் பாடல்களும் ஏனையோர்களுக்குச் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் கொங்கு நாடும், திருப்பேரூர் ஆராய்ச்சி, மருதமலை மான்மியம் முதலியன இராமச்சந்திரனால் எழுதப்பட்டன. சேக்கிழார் சரிதம், நீத்தார் பெருமை, கருவூர்த்தேவர் முதலியன திரு C. K. சு. அவர்களால் வெளியிடப்பட்டன. எல்லாவற்றிலும் சிறப்பாகப் பெரியபுராணப் பேருரை வெளியீடு வெளிவந்து கொண்டிருக்கிறது. இதில் சில ஆராய்ச்சிப் பகுதிகள்

இராமச்சந்திரனாரால் எழுதப்பட்டுள்ளன. தமிழ் மொழியிலேயே மிகச் சிறந்ததான இந்த வெளியீட்டிற்கு சிவக்கவிமணி-திரு. C. K. S. அவர்களே எல்லா முறைகளிலும் சிறந்த ஆதார பூதராக இருக்கின்றார்கள். அவருடைய சிறந்த திருத்தொண்டு கோவைத் தமிழ்ச்சங்கத்திற்கே பெரும் பேருக இருக்கின்றது. ஏற்கனவே இவ்வெளியீட்டில் நான்குபடிகள் வெளிவந்து விட்டன. இனி வரும் எல்லாப் படிகளும் எழுதி நிறைவு பெற்றுவிட்டன. இதைப்போல ஒரு சிறந்த வெளியீடு வேறு எந்த இந்திய மொழியிலும் இல்லை என்று கூறலாம்.

தமிழ்ச் சங்கம் செய்த மற்றொரு பெரிய திருத்தொண்டு 'கொங்குமலர்' என்ற ஒரு திங்கள் வெளியீடாகும். இதற்கு இராமச்சந்திரனாரே ஆசிரியராக அமர்ந்தார். *1934* முதல் *1937* வரை நான்கு ஆண்டுகள் இந்த வெளியீடு சரியாக வெளிவந்தது. அதில் மிக அருமையான கட்டுரைகள் வெளிவந்துள்ளன. ஆராய்ச்சியின்பாற் பட்ட அவைகள் பலராலும் போற்றப்பட்டன. ஆனால் சரியான பொருள் ஆதரவு இல்லாததினால் அவ்வெளியீடு நின்று விட்டது. வெளிவந்த நான்கு படிகளும் ஆராய்ச்சித்துறையில் ஈடுபடும் மக்களுக்கு மிகவும் பயன் படத்தக்கவை. கொங்கு நாட்டுச் சரிதம், கொங்கு நாட்டுப் புலவர்கள், கொங்கு நாட்டுத் தலங்கள், பாடல்கள் முதலியன அதில் வந்துள்ளன. இனியும் அவ்வெளியீட்டை உயிர்ப்பிக்க வேண்டும் என்ற ஆவல் தமிழ்ச் சங்கத்திற்கு உண்டு.

## 11. உத்தியோகமும் ஈடுபாடும்

வாழ்க்கைத் தொழில் வழக்கறியும் தொழிலாக இருந்த போதிலும் ஓய்வு நேரம் எல்லாம் பொது மக்கட் சேவையே மிகுதியாக இருந்தது. ஆனல் 1928 ல் ஒரு மாறுதல் ஏற்பட்டது. கோவை நீதி மன்றத்தில் அபீஷல் ரிசீவர் என்ற பதவி காலி ஆயிற்று. அந்த பதவிக்குப் பொறுப்புள்ள ஒரு ஆள் வேண்டும் என்று அதிகாரிகள் எண்ணினர்கள். அப்போது யாதொரு கேள்வியும் இன்றி அந்தப் பதவிக்கு இராமச்சந்திரனுரைத் தேர்ந்தெடுத்து நியமித்தார்கள். ஏப்ரல் மாதம் முதல் தேதியிலேயே அந்தப் பதவி ஒத்துக்கொள்ள வேண்டிவந்தது. அது முதல் ஏறக்குறைய ஐந்து ஆண்டுகள் வரை அந்த உத்தியோகம் செய்யவேண்டிவந்தது.

அந்த உத்தியோகத்தில் செய்யவேண்டிய வேலை நாதாரிகளின் (இன்சால் வெண்ட்) சொத்துக்களை பரிபாலனம் செய்வதே ஆகும். எவனொருவன் கடன் வாய்ப்பட்டு அதனைத் தீர்க்க முடியாமல் திண்டாடுகிருனே அவன் நீதிபதிக்கு மனுசெய்து கொள்ளலாம். நீதிபதி அவனை நாதாரி அல்லது கடன் கட்ட இயலாதவன் என்று தீர்மானித்து அவன் சொத்துக்களை ரிசீவரிடம் ஒப்புவிப்பார். ரிசீவர் அச்சொத்துக்களை விற்றுப் பணம் ஆக்கிக் கடன்காரர்களுக்கு வீதாச்சாரம் பிரித்துக் கொடுக்கவேண்டும். மேலும் யாராவது ஒருவன் கடன்தாரர்களை ஏமாற்றுவதற்காகத் தன் சொத்துக்களைப்பராதீனம்செய்கிருனே அவனையும் நாதாரியாக்கும்படி ஒரு கடன்காரன் நீதிபதிக்கு மனுச்செய்து கொள்ளலாம். நீதிபதி விசாரித்து மேற்கண்டபடி

செய்தான் என்று ருசுவானால் அவனை நாதாரி என்று தீர்மானிக்கலாம். அப்போது அவனுடைய சொத்துக்கள் ரிசீவரிடம் ஒப்புவிக்கப்படும். அவைகளை ரிசீவர் விற்றுக் கடன்தாரர்களுக்குக் கொடுக்கலாம். இந்த இரண்டுவகை பரிபாலனங்களும் செய்யவேண்டும்.

இந்த பரிபாலனங்கள் சுலபமாகச் சொல்லப் படினும் இவைகளில் பலவிதமான உள் விவகாரங்கள் முளைத்துவிடும். அவைகளை எல்லாம் ரிசீவர் கவனிக்க வேண்டிவரும். தவறுதல் ஏற்பட்டால் ரிசீவரே பொறுப்பாளி. கோவை ஜில்லாவும் நீல்கிரி ஜில்லாவும் கோவை ரிசீவர் ஆளுகைக்குட்பட்டிருந்தன. இராமச்சந்திரனார் இந்த அலுவலை ஏற்றுக்கொண்ட காலத்தில் கணக்கற்ற நாதாரி வழக்குகள் இருந்தன. முதல் பெரிய போருக்கும் இரண்டாம் பெரிய போருக்கும் இடையிலே பொருளாதாரத்தில் உலகமெங்கும் மிகுந்த சீர் குலைவு விளைந்துவிட்டது. 1928 முதல் 1932 வரையில் நாடெங்கும் அலங்கோலப் பட்டிருந்ததை ஞாபகப் படுத்திப் பார்க்கலாம். அப்போது வர்த்தக நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. ஆகவே நாதாரிகள் பெருகினார்கள். மோசடியும் சாதாரணமாகிவிட்டது. கோவையில் நாதாரி வழக்குகள் மிகப் பெருகிவிட்டன. இந்தக் காலத்தில் இந்த உத்தியோகத்தை ஏற்றுக்கொண்டதினால் மிகுந்த வேலையும் தொல்லைகளும் ஏற்பட்டன.

அலுவலில் அவருக்குமுந்தியே பலபிசகுகள் ஏற்பட்டிருந்தன. அவைகளைத் தீர்க்கமுயன்றதில் புது பிசகுகள்தோன்றின. வேலை அதிகரித்ததினால் இந்தஅலுவல் இராமச்சந்திரனாருடைய மன அமைதியையும் உடல்

நலத்தையும்பாதித்தது. அரசியலாரும் இரண்டு முறை இந்த அலுவலை நீடித்தனர். ஆனால் அதனை மறுக்க வேண்டிவந்தது. இருதய நோய் வரும் போல் இருந்தது. கையினால் எழுதவும் முடியவில்லை. மைல்கள் கணக்காக நடந்து வழக்கப்பட்ட அவருக்கு ஒரு பர்லாங்கு தூரமும் நடக்கமுடியவில்லை. ஆகவே மூன்றும் முறை கெடு முடிந்தவுடனே வேலை வேண்டாம் என்று கூறவேண்டிவந்தது.

1933 ல் வேறொருவரை நியமித்து இவரை விடுவித்தார்கள். அது முதல் சிறையிலிருந்து விடுபட்டதாக எண்ணி மகிழ்ச்சி அடைந்தார்.

இவ்வித அலுவலினால் ஏனையோராயின் மிகுந்த வருவாயும் மேற்பதவிகளும் கிடைத்திருக்கக் கூடும். ஆனால் இவருக்கோ இது பெரும் தொல்லையாக இருந்தது. வருவாய் மட்டும் இருந்து என்ன பயன்? மனம் நிம்மதியாக இருக்கவேண்டாமோ? வழக்குகளின் தொடர்பு மிகுதியாக உள்ள அலுவலே இவருடைய இயல்பிற்கு ஏற்றதல்ல எனத் தோன்றிற்று.

1933 முதல் தன் பழைய வழக்கறியுந் தொழிலிலேயே அமர்ந்து இருந்தார். ஆனால் பொது மக்கட் சேவையே மிகுதியாக ஏற்பட்டது. படிப்பு, எழுத்து இவைகளே முக்கிய உல்லாச வேலைகளாக இருந்தன.

1935 சித்திரையில் பழைய குடும்ப வீட்டை விட்டுத்திருச்சிப் பாதையில் இராமநாதபுரத்தில் இருக்கும் பங்களாவிற்குக் குடி சென்றார். அந்த மாறுதலினாலே தனக்கும் தன் மனைவிக்கும் உடல் நலிவு நீங்கி நலம் வரக் கூடும் என்ற எண்ணத்தின் பேரில் வீடு மாற்றப்பட்டது.

## 12. சைவப்பணியும் சமாஜப்பணியும்

பண்டைக்காலம் முதற்கொண்டே இவரது குடும்பம் சைவசமயத்தில் ஈடுபட்டதென்று முன்னமே கூறப்பட்டது. இள வயது முதற்கொண்டே கோயில்களுக்குச் சென்று வழிபடுவதும் சைவ நூல்களை ஓதுவதும் மிகுந்த விருப்பமாகவும் இருந்தது. தமிழ்ச் சங்கத்தில் சேர்ந்து அமைச்சர் பதவி ஏற்றதும் அங்கு வரும் சைவ அன்பர்களிடம் நட்பும் தொடர்பும் கிடைத்தன. சிறப்பாகத் திரு C. K. S. அவர்களின் நெருங்கிய நட்பு கிடைத்தது. கூட்டங்களில் பேசும்படியான பழக்கம் வந்தவுடனே சைவச்சபைகளுக்கு அழைக்கத் தொடங்கினர்கள். திருப்பேரூர், ஜலகண்டபுரம், விருமாண்டாம்பாளையம், இராசீபுரம் முதலான இடங்களில் நடந்த சைவத்திருக் கூட்டங்களுக்குச் சொற் பொழிவுகளை நிகழ்த்தும்படி அழைப்புக்கள் வந்தன. அந்தச் சமயங்களில் சைவப் பெரியார் சதாசிவம் செட்டியார், வீர சுப்பையா சுவாமிகள் முதலியோர் தலைமையில் பேசும் பாக்கியம் கிடைத்தது. இந்தத் தொடர்பு தூர இடங்களுக்கும் இழுத்துச் சென்றது. தேவக் கோட்டை சிவாகம சபைக்கும், சாத்தூர் தமிழ்ச் சங்கத்திற்கும், தூத்துக்குடி சைவ சித்தாந்த சபைக்கும் சொற்பொழிவுகளாற்றவும் தலைமை வகிக்கவும் செல்ல வேண்டி வந்தது. 1934 ல் தூத்துக்குடி 57 வது சைவ சித்தாந்த சபைக் கூட்டத்தில் தலைமைவகித்து நீண்ட சொற்பொழிவு நிகழ்த்தினர். அதற்கு V. O. சிதம்பரம் பிள்ளை முதலிய பெரியார்கள் பலரும் வந்திருந்தார்கள். இந்த முறையில் தென் நாடு முழுதும் சைவத் தொண்டு செய்யும் புனித வேலைகிடைத்தது.

சாத்தூர், தூத்துக்குடி சபைகளுக்குச் சென்ற நாளில் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், ச. சச்சிதாநந்தம்பிள்ளை, T. S. கந்தசாமி முதலியார், சிவகுருநாத பிள்ளை முதலியோருடைய நெருங்கிய நட்பு கிடைத்து. திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் சைவ சமாஜக் கூட்டங்களுக்கு வரும்படி தூண்டினார். 1936 ல் முதல் முதலாகத் திருவதிகையில் நடந்த கூட்டத்தில் "சொல்லுக் குறுதி" என்பதைப்பற்றிப் பேசினார். அப்போது திரு. வி. க. தலைமைவகித்தார். ஞானியார் சுவாமிகள் எழுந்தருளி இருந்தார்கள். பிறகு 1937ல் வேலூரில் ஞானியார் சுவாமிகள் தலைமையில் 'சைவப்புள்ளிகள்' என்பதைப்பற்றிப் பேசினார். அப்போது அடுத்த ஆண்டு கோவைக்கு வரும்படி சமாஜத்தை அவரே அழைத்தார். அடுத்த ஆண்டு கோவையில் சமாஜம் சச்சிதாநந்தம்பிள்ளை அவர்கள் தலைமையில் நடந்தது. இராமச்சந்திரனாரே செயலாளராக இருந்து எல்லாப் பொறுப்பும் ஏற்றுக் கொண்டார். வரவேற்புப்பா முதல் நன்றி கூறும் பாக்கள் வரை அவரே இயற்றவேண்டிவந்தது. அந்த ஆண்டு புத்தப் புதிதாகக் கொங்குநாட்டைப்பற்றி ஒன்பது துண்டுப் பிரசுரங்கள் பதிப்பிக்கப்பட்டன. அவற்றில் பெரும் பான்மை அவரே தொகுத்தது. அதற்கு முன் கொங்கு நாட்டின் சங்கதிகளை அத்தனை விவரமாக எவரும் எழுதினது கிடையாது. இன்று வரை வேறு பதிப்புகளும் வரக்கிடையாது. அது முதல் ஒவ்வொரு ஆண்டு தோறும் நடைபெற்ற சைவ சமாஜத் திருக்கூட்டங்களுக்குத் தவறாமல் சென்று அவைகளில் ஈடுபட்டு வந்திருக்கிறார். குன்றக் குடியில் (1939) திரு. C. K. S. அவர்கள் தலைமையில் கல் வெட்டுக்

களைப் பற்றிப் பேசினர். அது நடந்தவுடன் திரு C. K. S. உடனே அவர் இலங்கைக்குச் சென்று யாழ்ப் பாணத்தில் சைவ பரிபாலன சபையார் நடத்தின இந்துமா நாட்டில் ஒருநாள் தலைமை வகித்தும் பிறகு பல ஊர்களில் பேசியும் கொழும்பில் விவேகாநந்தர் சபையில் ஒருநாள் பேசியும் சைவத் தொண்டு புரிந்து விட்டு ஊர் வந்து சேர்ந்தனர். சைவமா சமாஜ ஆண்டுக் கூட்டங்களில் இருமுறை தலைமை வகித்திருக்கிறார். ஒரு முறை மயிலத்திலும் (1940) மற்றொருமுறை சிவகாசியிலும் (1945) தலைமை வகித்து நடத்தியிருக்கிறார். அவ்வாண்டுகளில் சமா ஜத்திற்கு இருக்க இடம் வேண்டும் என்று பெரும் பாடு பட்டார். ஆனல் அது செயல் முறையில் ஈடேறவில்லை. அந்தக்காலங்களில் சமாஜ வெளியீடா கிய சித்தாந்தத்திற்கு அனேகக் கட்டுரைகள் எழுதி வந்திருக்கிறார். ஆண்டுக் கூட்டங்களிலேயே யன்றி திங்கள் கூட்டங்கள் பலவற்றிலும் கலந்து கொண்டி ருக்கிறார். கா. இராமநாதன் செட்டியாருடன் சேர்ந்து சேரித் திருப்பணியில் ஈடுபட்டிருக்கிறார். நிரம்ப வேலை செய்யும் கருத்துடன் சிவஞான போத வகுப்பு கள் நடந்தபோது அவைகளில் கலந்து கொண்ட தன்றி (1943) பாபநாசம் (1944) சிதம்பரம், (1945) வித்தியாலயம் முதலிய இடங்களில் வகுப்புகளிலும் பாடம் சொல்லிக் கொடுத்ததுண்டு. சமாஜத்தின் முன்னேற்றத்தைக் கருதித் தன்னல் ஆன செயல்களைச் செய்தது அவருக்குச் சைவத்தின் மேல் இருந்த ஆர்வம் தான் என்று கூறவேண்டும்.

## 13. பேச்சும் எழுத்தும்

பாடசாலைகளில் வாசித்த காலத்தில் பேசுந் திறமை சிறிதும் பெற்றிருக்கவில்லை. எழுதினதும் மிகக் குறைவுதான். மாணவனாக இருக்கையில் கோவை ஜனாபிமானி போன்ற சில பத்திரிகைகளுக்கு மட்டும் எழுதிவந்தார். வாழ்க்கையில் ஈடுபட்டபிறகு தான் தமிழ்ச் சங்கத்திலும் குலச்சங்கத்திலும் சேர்ந்து பேசத் தொடங்கியது. நீண்ட பழக்கத்தினால் பிறர் எளிதில் அறிந்து கொள்ளும் வண்ணம் பேசும் திறமை பெற்றார். பின் காலத்தில் திரு. வி. க. மடலில் இவர் எழுதிய "பேச்சு" என்ற கட்டுரையில் இவருடைய கொள்கைகள் முழுவதும் வெளிவந்துள்ளன. பொதுவாகத் தமிழாசிரியர்களைப் பற்றி இந்நாட்டில் தாழ்ந்த எண்ணம் ஒன்று மக்களிடை பரவி இருந்தது. அதனைப் போக்கவேண்டும் என்று பல தடவை முயற்சி எடுத்துக் கொண்டுப் பல இடங்களில் பேசியும் தானே அதனைச் செயல் முறையில் காட்டிக்கொண்டு வந்தும் இருக்கிறார். வீணும் பொய்யுமான அவையடக்கம், ஒழுங்குக்கு மாறாகக் குறித்தநேரத்தில் பேசாமை, தலைவர் குறிப்பிட்டும் பேச்சை வளர்த்துதல், குறித்த தலைப்பிற்கு மீறின செய்திகளைக் கூறல் முதலிய ஆசாபாசங்களைக் கண்டித்துப் பேசியும் எழுதியும் இருக்கிறார். சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் என்ற அழகுகளைச் செயல்முறையில் கொண்டு வருவதுதான் தமிழ்ப் பேச்சுக்குப் பெருமைதரும். இந்த வகையையே தன் பேச்சில் ஈடுபடுத்தி வந்தார். சிறு சிறு கதைகளையும் எடுத்துக்காட்டுக்களையும் மிகுதியாகப் பயன்படுத்திக்

கொள்வதே பேச்சுக்கழகு. மிகக் கடுமையான சித்தாந்த உண்மைகளை எடுத்துக் கூறும்போதும் சிறு கதைகளைச் சொல்லி விளங்க வைத்தது குறிக்கத் தக்கது. இந்த வகையில் தருமபுரம் சிவஞானபோத மாநாட்டில் பேசியதன்றி 'குழந்தையர் சிவ ஞானம்' என்ற நூலையும் இதே முறையில் எழுதியும் வைத்துள்ளார்.

திங்கள் வெளியீடுகளில் அனேக கட்டுரைகளை எழுதி வைத்திருக்கிறார். அவைகளில் இலக்கியம், கலை, சமயம், ஆராய்ச்சி முதலியவைகள் சிறப்பானவை. ஆராய்ச்சி உரைகளிலே கல்வெட்டு ஆராய்ச்சி சிறப்பானது. "அடியார்களும் கல் வெட்டுக்களும்" என்ற தலைப்பில் பல கட்டுரைகள் செந்தமிழ்ச் செல்வியில் வந்திருக்கின்றன. சேக்கிழார் காலத்தைப் பற்றிக் கல் வெட்டுக்கள் மூலமாக சான்றுகள் தந்திருக்கிறார். இலக்கியம், சரிதம், கலைஞானம், இவைகளைப் பற்றிய குறிப்புக்கள் அளவுகடந்தனவாகச் சேகரித்து வைத்துள்ளார்.

கலைகளிலே சரிதம், கல்வெட்டுக்கள், பண்டை நாகரிகம், நடையுடைப் பண்புகள், பூவியல் நூல், சிற்பம், ஓவியம், கலாச்சாரம், மொழிநூல், முதலியவைகளில் ஈடுபாடு மிகுதி. கொங்கு நாட்டுச் சரிதத்தை மிகத் தெளிவாக ஆராய்ந்து 48 கட்டுரைகள் எழுதி வைத்துள்ளார். ஊர்ப்பெயர் வரலாறுகளைப் பல எழுதி பூவியல் சங்கத்துத் திங்கள் வெளியீட்டில் பதிப்பித்திருக்கிறார். கலாசார சேவையில் ஈடுபட்டு வானொலியில் பல தடவை பேசியிருக்கிறார்.

சிறு கதைகள் எழுதுவதில் ஆர்வம் மிகுதி. "சிறு கதைத் திரள்" என்ற நூல் வெளிவந்துள்ளது. அதில்

சிறு கதை என்பது என்ன என்ற கட்டுரை மிகச் சிறந்தது. கோயில்களில் நடக்கும் அநீதிகளை விளக்கு வதற்காகச் சிறுகதைகளை இயற்றி நகைச்சுவை மிளிர வெளியிட்டிருக்கிறார். மேலும் இல்லற வரலாறுகள், நாட்டு நடவடிக்கைகள் போர்ச் செய்திகள் முதலிய வைகளை விளக்கும் சிறு கதைகள் அளவிறந்தனவாக எழுதியிருக்கிறார். நாட்டுக் கதைகள் பாடல்கள் முதலியவைகளைச் சேகரித்து அவைகளைப்பற்றிப் பல கட்டுரைகளை எழுதியிருக்கிறார். பண்டை நாகரிக ஆராய்ச்சிச் சங்கம், கலையியல் மா நாடு (Science Conference) சரித மா நாடு இவைகளில் அங்கத்தின ராக இருந்து அம் மகாநாடுகளில் பேசியும் எழுதியும் வந்திருக்கிறார்.* தஞ்சைப் பூவியல் மா நாட்டில் தலைமை வகித்து நீண்டதான புதிய முறைச் சொற் பொழிவு ஒன்றும் நிகழ்த்தி இருக்கிறார். ஆங்கில அரசாங்கப் பூவியல் சங்கத்தில் அங்கத்தினராகத் தெரிந்தெடுக்கப்பட்டு F. R. G. S. பட்டம்வழங்கப் பட்டார். இப்பட்டம் பெற்றவர்கள் இந்தியாவில் மிகக் குறைவான பேரே. தமிழ்மட்டும் அன்றி ஆங்கி லத்திலும் பல கட்டுரைகளும் எழுதியிருக்கிறார். ஆங்கிலப் பாடல்களைத் தமிழில் செய்யுள் வடிவில் மொழி பெயர்த்திருக்கிறார். இவ்விரண்டு மொழி கள் அன்றி தெலுங்கு, கன்னடம், மொழிகளில் படிக்கவும் பேசவும் முடியும். வடமொழி, ஹிந்தி, உருது, மலையாளம் மொழிகள் சாதாரணமாகத் தெரியும். மொழிகள் என்றால் மிக ஆர்வத்தோடு ஓத

* 1937ல் கல்கத்தாவில் நடந்த வெள்ளிவிழா கலையியல் நாட்டில் கலந்து கொண்டு ஓர் அரிய சொற்பொழிவும் நிகழ்த்தி யிருக்கிறார். (Science Conference Silver Jubillee)

விருப்பம் உண்டு. இந்த ஆராய்ச்சியை ஒரு உல்லாச விளையாட்டாகவே கருதி வந்திருக்கிறார்

## 14. சமய நிலையங்களும் அதில்தொண்டும்

சமய நிலையங்கள் சீர் கெட்டு இருக்கின்றன; ஆகவே அவைகளைச் சீர்திருத்த வேண்டும் என்ற நினைவு வெகு காலமாக அவருக்கு உண்டு. சமய மாநாடுகளிலும் இக்கருத்தை அடிக்கடி அவர் வெளியிட்டதுண்டு. ஒருமுறை திரு. சதாசிவ ஐயர் அவர்கள் சமய நிலையச் சங்கத்தின் தலைமை என்ற நிலையில் கோவைக்கு விஜயம் செய்த காலத்தில் அவருக்கு ஒரு வரவேற்பு நடந்தது. அப்போது பலபேர் அவரைப் பாராட்டியபோது இராமச்சந்திரனும் அவரைப் பாராட்டிப் பேசித் தற்காலத்தில் கோயில்களில் நடக்கும் தீமைகளை எடுத்துச் சொன்னார். அப்போது அதனைக்கேட்ட ஐயரும் இவர் யார் என்று விசாரித்துத் தன் நண்பர் கிரிய செட்டியாரின் தமயனார் மகன் என்று கேள்விபட்டவுடன் மிகுந்த பிரியத்துடன் அவருடன் வார்த்தையாடினார். பல ஆண்டுகள் கழிந்தன. 1940ல் சமய நிலையப் பாதுகாப்புக் கழகத்தில் சில அங்கத்தினர்களின் கெடுவு தீர்ந்தவுடன் அந்த இடங்களில் புதிதாகத் தெரிந்தெடுத்தல் தொடங்கியபோது ஒரு பதவி இராமச்சந்திரனுக்குக் கிடைத்தது. பல அன்பர்கள் இப்பதவிக்கு ஏன் செல்லவேண்டும் என்று கேட்டார்கள். ஏனெனில் அக்கழகத்தைப் பற்றி அக் காலத்தில் மக்களிடை அருவருப்பும் நீதி மன்றத்தில் சந்தேகமும் ஏற்பட்டிருந்தது. மேலும் ஊதியமும் மிகக்குறைவு. இராமச்சந்திரனரோ இப்பதவி ஏற்பதனால் 'கோயில்களில்

உள்ள ஆபாசங்களை நீக்கமுடியும் என்ற நம்பிக்கையும் உறுதியையும் கொண்டே ஏற்றுக்கொண்டார். அந்த உறுதியுடனே வேலையும் செய்தார். ஐந்து ஆண்டுகள் மிகப் பாடுபட்டு வேலைசெய்தும் தான் நினைத்தபடி வெற்றியாக வினைசெய்ய முடியவில்லை. ஒரு தொழிலில் வெற்றியடைவதற்கு ஒருவனுடைய வேலையும் உறுதியுமே போதாது. மக்கள் ஒத்துழைப்பும், கூடப் பாடுபடும் அன்பர்களின் ஒத்துழைப்பும், அவர்களின் தன்னலமின்மையும், மேல் அதிகாரிகளின் அன்பு நோக்கமும் இவைகள் எல்லாம் இருந்தால் அன்றிக் காரியம் வெற்றி ஆகாது. இந்த உண்மை ஐந்து ஆண்டுகளுக்குப் பிந்தியே தெரிந்தது. ஆனல் ஒரு பக்கத்தில் ஆறுதலும் இருந்தது. அவர் தம் கடமையை தன்னலம் கருதாது வேலைசெய்தார்; அதன் பலன் கிடைத்ததோ இல்லையோ என்ற கவலை இல்லாதவராக இருந்தார்; "வேண்டி வினை செயேல்" என்ற ஔவையார் வாக்கைக் கடைப் பிடித்துக் கடமைசெய்தார்; இது ஒன்றே போது மானது. இந்தமுறையில் அவர் தொழில் வெற்றி யடைந்தது என்றே கூற வேண்டும்.

சமய நிலையப் பாதுகாப்புக் கழகம் சென்னையில் வேலைசெய்தபடியால் 1940 மேமுதல் 1945 மேவரை யில் சென்னையில் தியாகராய நகரில் அவர் வசிக்க வேண்டி வந்தது. கழகமும் மயிலாப்பூரில் சிறிது காலமும் நுங்கம்பாக்கத்தில் பெரும்பான்மை நாள் களும் வைக்கப்பட்டிருந்தது. கழகத்தில் ஒருதலைவரும் மூன்று அங்கத்தினர்களும் இருந்தார்கள். அவர்களுக் குக் கீழ் நூற்றுக்கணக்கான சிப்பந்திகள் உண்டு. ஆளவேண்டிய சமய நிலையங்கள் 26000க்கு மேல்

இருந்தன. உண்மையாகப் பாடுபடுபவனுக்கு மிகுந்த வேலே உண்டு. ஆலயங்களேயும் மடங்களேயும் மேல் பார்வை யிட்டுக் கணக்குப் பரிசீலனே செய்வது மாத்திரமேயன்றித் தனி ஆள்களின் உரிமைகளே விசாரித்துத் தீர்ப்பு கூறவும், ஒன்றற்கொன்று ஏற்படும் வழக்குகளேத் தீர்ப்பதுவும் அலுவலாக இருந்தது. ஆகவே அக் கழகம் ஒரு நீதி மன்றமாகவும் இருந்தது. அவர் அலுவலே ஏற்றுக்கொண்ட காலத்தில் குறைவுகள் பலவாக இருந்ததினுல் அவைகளே நன்ருக ஆராய்ந்து அவைகளேத் தீர்க்கவேண்டிய கடமை ஏற்பட்டது. இந்தச் செயலில் கழகத் தலேவரின் ஒத்தாசை மிகவும் வேண்டி இருந்தது. முதலில் கழகத்தின் அலுவலகத்தைச் சீர்திருத்த வேண்டியிருந்தது. பழம்புலிகளே நீக்கி நல்ல ஆட்களே வைக்க வேண்டியிருந்தது. ஆலய அறங் காப்பார்களிலும் சிறந்த மக்களேத் தேடவேண்டி வந்தது. இவைகளுக்கு இடையில் நீதி மன்ற வழக்குகள் பல நேர்ந்தன. நீதிமன்றச் செலவு குறைக்கவேண்டும் என்ற சட்டமே அவ்வழக்குகளே அதிகரித்தது.

ஐந்து ஆண்டுகளுக்குள் தொண்டை நாடு, சோழ நாடு, பாண்டிய நாடுகளில் முக்கியமாக வேலேபார்த்து வந்தார். இராயலு சீமையிலும் ஆந்திர நாட்டிலும் சிறிதுகாலம் பார்த்தார். தென் கன்னடத்தில் ஒரு முறை சுற்றுப் பிரயரணம் செய்தார். இந்த வகையில் இந்த மாகாணத்தின் பெரும்பான்மையான புனித இடங்களேயும் சமய நிலேயங்களேயும் பார்த்திருக்கிருர். ஒவ்வொரு முறையிலும் 6 ஜில்லாக்களின் அலுவல் பார்க்கவேண்டி வந்ததினுலும் பலதடவை மாற்றப்பட்டதாலும் இவ்விதமாகமாகாணம் முழுவதும் சுற்றி

ஆராயவேண்டிய சமயம் கிடைத்தது. அடியார்களின் அடிச்சுவடுபட்ட இடங்களையும் அவர்களுடைய பாடல்கள் புனிதமாக்கின தலங்களையும் பார்க்கவேண்டும் என்ற ஆவல் மிகுதியும் படைத்தவர். ஆகவே எல்லாத் தலங்களையும் பார்த்துவிட வேண்டும் என்ற துணிவுடன் தம் திட்டத்தை அமைத்துக்கொண்டார். இந்த வகையில் பெரும்பான்மையான பாடல்பெற்ற தலங்களையும் வைப்புத் தலங்களையும் புராணத்தலங்களையும் பார்த்துவிட்டார். அவர் பார்த்த ஒவ்வொரு தலத்திற்கும் சரிதக் குறிப்புக்களும், மற்றச் சிறப்புக் குறிப்புக்களும், எழுதித் தொகுத்து வைத்திருக்கிறார். இவ்வாறு தொகுத்த குறிப்புக்கள் 2250 ஆகும். மலைநாடு, துளுநாடு, கொங்கு நாடு, பாண்டிநாடு, தொண்டை நாடு, நடு நாடு - என்ற நாடுகளின் சைவத் தலங்கள் முழுதும் பார்த்துவிட்டார். வடநாட்டில் ஒன்றும் சோழநாட்டில் 153 ம் பார்த்தவகையில் 4ம் 37ம் முறையே விடுபட்டன. இன்னமும் ஆறு திங்கள் வேலையில் இருந்திருந்தால் இவைகளையும் பார்த்திருக்கக் கூடும். திருமால் தலங்களில் 108க்கு 80 பார்த்திருக்கிறார். இவைகளிலே சோழநாடு, மலைநாடு, வட நாடுகளில் மாத்திரம் சிற்சில நின்றுவிட்டன. அவைகளையும் பூர்த்தி செய்யவேண்டும் என்ற ஆர்வம் இன்னும் உண்டு.

சமய நிலையங்களின் மேற்பார்வை எடுத்துக்கொண்டதும் முதலிலேயே அதுவரை நடத்திவந்திருந்த வேலைகளை அறிந்துகொண்டார். நிலையங்களின் கணக்குப் பரிசிலனை ஒன்றே சிறந்திருந்தது. நிலையங்களின்மீது முழு அதிகாரம் வேண்டும் என்ற கொள்கையில் நீதிமன்ற வழக்குகளில் நிரம்ப காலம் செலுத்

தப்பட்டிருந்தது. ஆகவே பொது மக்களுக்கு இக் கழகம் அதிகார வேட்டையாகும் ஒரு வர்க்கம் என்ற எண்ணமே தோன்றிற்று. அதனால் வெறுப்பே எங்கும் நிறைந்திருந்தது. இக்கழகம் தோன்றியபோது வழக்குகள் மறைந்து சீர்திருத்தம் ஏற்படும் என்று நம்பியிருந்த மக்களுள் வேறுவிதமான எண்ணம் முளைத்திருந்தது. அந்த எண்ணத்தைப் போக்கடித்துக் கழகம் நல்ல பெயர் வாங்கவேண்டும் என்ற நோக்கம் அப்போது தான் புறப்பட்டது. அதற்காக ஆலயப் பணிகளில் சமய மேம்பாடு தோன்ற வேண்டும் என்ற கருத்துக் கொண்டு சில சீர்திருத்தங்களை இராமச் சந்திரனார் கொண்டுவந்து புகுத்தினார். அது வரை சமய நிலையங்களின் வருமானம் முழுதும் வழிபாடு, திருவிழா, சிப்பந்திச்செலவு இவைகளுக்குக்கே செல வழிக்கப்பட்டன. சமயப்பணிக்கு ஒரு அளவும் செல வழிக்கப்படவில்லை. ஆகவே ஓர் சுற்றறிக்கை விடப் பட்டது. சமய நிலையங்களின் மொத்த வரும்படியில் நூற்றுக்கு ஐந்து வீதம் சமயப்பணிக்கு என்று ஒதுக்கிவைக்க வேண்டும். அதில் சமயச் சொற் பொழிவுகளை ஏற்படுத்துதல், ஆலய வரலாற்றைச் சுருக்கமாக எழுதி இலவச விலைக்கு விற்றல், ஆலயச் சுவர்களில் தேவாரப் பிரபந்தத்துதி பாடல்களை எழுது வித்தல், ஆலயங்களில் தெரிந்து கொள்ள வேண்டியவற் றைப் பெயர்கள் எழுதித் தெரியவைத்தல், திருவிழாக் காலங்களில் சமயப் பிரசாரம் செய்தல், தேவாரப் பிர பந்தப் பாடசாலைகளை வைத்து நடத்தல், ஓதுவார் களைக் கொண்டு தினப்படி துதிகளை ஓதச்செய்தல் முதலிய நற்செயல்கள் செய்யப் படவேண்டும் என் பதே. இந்த அறிக்கை வெளியிட்டதன்றி அங்கங்கே

சென்ற காலங்களில் இவைகளைச் செய்யும்படி வற்புறுத்தினர். செலவு திட்டங்களை ஆங்கீகரிக்கும்போது இச்செலவுகள் அவைகளில் உண்டா என்று கவனித்து வருவார். இந்த வகையில் தமிழ்நாடு முழுவதும் புது இயக்கம் தோன்றிக் கோயில் அதிகாரிகள் ஆர்வத்துடன் அவைகளைச்செய்ய உடன்பட்டார்கள். இதனை மக்களும் ஆதரித்தார்கள். இப்போதும் சோழ நாடு பாண்டிய நாடுகளில் இந்தச் சீர்திருத்தங்களைக் காணலாம். துதிப்பாடல்களை எழுதுவதற்கு ஒரு சிறு தொகை நூலும் தருமபுரத்து மடத்தாரைக் கொண்டு அச்சடிப்பித்து நாடெங்கும் வழங்கினர். எங்கும் தேவாரப் பிரபந்தப்பாடல் மயமாகவே ஆயிற்று.

மேலும் ஆலய வரலாறுகளை எழுதுவதற்கு ஒரு பக்கத்திற்கு ஒரு ரூபாய் வீதம் 25 ரூ. வரை பரிசு கொடுப்பதாகப் பண்டிதர்களுக்குத் தெரியப்படுத்தினதினால் அனேக ஆலயங்களில் சிறு சிறு வரலாற்று நூல்கள் வெளிவந்தன. அவைகளில் கல்வெட்டுச் சான்றுகளும் குறிக்கப்பட்டன. இவ்வாறு 150 சிறு நூல்கள் சில ஆண்டுகளுக்குள்ளேயே வெளிவந்தன. அவைகள் இரண்டு மூன்றுமுறை பதிப்பிக்க வேண்டியும் வந்தன. எல்லா நூல்களையும் இவரே படித்து ஆங்கீகரித்தனர். இதனாலே புலவர்களுக்கு வேலையும்கிடைத்தது. பிரசாரமும் ஏற்பட்டது. திருவிழாக்களிலும் மற்ற நாள்களிலும் சொற்பொழிவுகள் நடத்தும்படி செய்ததினால் பலதமிழ்ப்புலவர்களுக்குவேலையும் கிடைத்தது. தமிழ், சைவம், வைணவம், என்றவகைகளில் ஆர்வமும் பிறந்தது. பன்னிரண்டு நிரந்தரப் பிரசாரகர்களை ஏற்படுத்தி இவர்களைக் கொண்டு மாதம் முழுவதும் 15 சொற்பொழிவுகளுக்கு குறையாமல் ஆலயங்களில்

கடத்திவைக்க ஒரு திட்டம் போடப்பட்டது. ஒவ்வொரு சொற்பொழிவிற்கும் 8 ரூ. அளவுதந்ததில் ஒரு குடும்பத்திற்குப் போதிய ஊதியமும் ஆலயத்திற்குக் குறைந்த செலவில் பிரசாரமும் கிடைத்த செய்தி எல்லாராலும் போற்றப்பட்டது. இந்த முறையைப் பெருக்க வேண்டும் என்று எண்ணினதோ ஓய்வு பெற்றதினால் நின்று விட்டது. இவருடைய பார்வையில் சுமார் 7000 ரூபாய் திட்டத்தில் 940 சொற்பொழிவுகள் பிரசாரகர்களால் நிகழ்த்தப்பட்டன. இவரும் தனியாக 179 சொற்பொழிவுகளை நிகழ்த்தியிருக்கிறார்.

ஆலயங்களில் வீண் ஆடம்பரங்களை ஆட்சேபித்து சிக்கனத்தைக் கைகொள்ளச் செய்து சமயப்பிரசாரத்தில் புகுத்தினதே இதுதான் முதன் முறை. இந்தத் திட்டம் தலைவர் சம்மதித்ததின் பேரில் தமிழ் நாடு முழுதும் நடைப்பெற்றது. ஆந்திர கேரள நாடுகளில் நடைபெறவில்லை. அதன் காரணம் அந்த அதிகாரிகளின் ஒத்துழைப்புக் குறைவினால் என்க.

நாடெங்கும் தமிழ்க் கூட்டங்களும் சமயக்கூட்டங்களும் நடைபெற்றன. நெல்லையில் அறக்காப்பாளர்களின் மகா நாடு ஒன்று நடைபெற்றது. அதனோடு ஒரு கண்காட்சியும் நடந்தது. அதனால் சிற்பக்கலை ஓவியக்கலை போற்றப்பட்டன. ஆலயங்களில் இருந்த பண்டைச் சிற்பங்கள் விக்கிரகங்கள் வெளியேற விடாமல், ஆலயங்களிலேயே காட்சிச்சாலைகளில்வைக்கப்பட்டன. ஆழ்வார் திருநகரி, அழகர் கோயில், தஞ்சை, திருவரங்கம் முதலிய ஆலயங்களில் இருக்கும் காட்சிச் சாலைகள் மிகச் சிறப்புற்றன. மேலும் சைவ வைணவ மாநாடுகள் நாடெங்கும் பரவின. தருமபுரத்தார் நடத்தின சிவஞான போத மாநாடு மிகவும்

புகழ் பெற்றது. மிகச் சிறந்த சைவ சீலர்கள் அதில் பங்கு எடுத்துக் கொண்டார்கள். அதில் இராமச்சந்திரனும் கலந்து கொண்டு ஒரு நாள்தலைமை வகித்ததும் குறிக்கத்தக்கது.

சீகாழியில் 1942ல் அருச்சகர்கள் மகாநாடு நடத்தி அவர்களைக் கொண்டு ஆலய வழிபாட்டு முறைகளை ஆராயச் செய்து அருச்சகர்களுக்குப் பயிற்சி தருதற்கு முயற்சிகள் எடுக்கப்பட்டன. அம்மகாநாட்டில் ஈசான சிவாசாரியார் போன்ற சிறந்த ஆதி சைவப் பிரமுகர்கள் பங்கு எடுத்துக் கொண்டு தங்கள் மதிப்புள்ள ஆலோசனைகளைத் தந்துதவினார்கள். ஆலயங்களை ஒட்டித் தேவாரப் பாடசாலைகள் நிறுவப்பட்டன. ஓதுவார்களுக்குப் பயிற்சியும் இடப்பட்டது. பாபநாசச் சைவசித்தாந்த வகுப்பில் பல ஆலயங்களின் ஓதுவார்களும் குருக்கள்மாரும் தகுந்த பயிற்சி பெற்றார்கள். சங்கரன்கோயில், கோயில்பட்டி முதலிய இடங்களில் தமிழ்ச் சங்கங்கள் நிறுவப்பட்டன. தூத்துக்குடியில் தமிழ்மொழியில் அருச்சனை செய்துவைத்துப் பழைய முறையில் வழிபாடு செய்யப்பட்டது. அதனை மக்கள் பெரிதும் பாராட்டினார்கள். ஆலயங்களை ஒட்டி சமய நூற்சாலைகள் வைக்கப்பட்டன. தருமபுர மடத்தார் மிகவும் சிறந்த சமயநூற்சாலை வைத்ததோடு நூற்றுக்கணக்கான சிறு நூற் பதிப்புக்களும் சித்தாந்த நூற்பதிப்புக்களும் தல வரலாறுகளும் வெளியிட்டார்கள்.

நாட்டில் கணக்கில்லாத கோயில்களில் கட்டடங்கள் அழிவு பெற்றிருந்தன. அவைகளைப் பழுது பார்க்கும்படி உத்தரவுகள் இடப்பட்டன. திருவதிகை, செல்லை, திருவாரூர், தருமபுரத்து ஆளுகைக்

கோயில்கள் கோயிலூர் முதலியவைகள் பழுதுபார்க்கப்பட்டு கும்பாபிடேகமும் செய்யப்பட்டன. கற்பக நாதர் குளம் வெகுகாலம்வரை பாழாய் கிடந்தது. அது கட்டப்பட்டுக் கும்பாபிஷேகம் செய்யப் பட்டது. பழனி நெல்லை முதலிய இடங்களில் சிறப்பாக கும்பாபிடேகங்கள் நடந்தன. திருத்தணியில் புதிதாகப் படிக்கட்டுத் திருப்பணி நடை பெற்றது. பழனியில் படிக்கட்டு அகலப்படுத்தப் பட்டது. வழியில் புது மண்டபங்கள் கட்டப்பட்டன. ஆலயங்களின் வருவாய்கள் மிகப்பெருகின. போர்க் காலத்தில் புதிதாக வேலைகளைச் செய்யமுடியாமல் போனதினால் மீதமான பணங்களை அரசியல் நிதிகளில் சேமிக்கப்பட்டன. வேண்டிய காலங்களில் ஆலயங் களுக்குத் தகுந்த உதவி அவைகளால் கிடைக்கக்கூடும். உணவு அபிவிருத்தி சம்பந்தமாகப் பல ஆலயங்கள் முயற்சிகளை எடுத்துக்கொண்டுத் தரிசு நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வந்தன. இந்த முறையில் ஆலயங்கள் பொதுமக்கட் சேவைசெய்தன.

மடாலயங்களும் சில வெகு அக்கரையோடு வேலைசெய்தன. ஆனால் சில மடங்கள் விவகாரங்களை பெரிதாக எடுத்துக் கொண்டனவே யன்றி பொறுப் புள்ள கடமைகளைச் செய்யவே இல்லை. தகுந்த முயற்சிகள் எடுத்துக்கொள்ளப் போதுமான சட்ட ஆதரவு இல்லாததே காரணம் எனச் சொல்ல வேண்டும். சமய நிலையச் சீர்திருத்தம் எவ்வாறு இருக்கவேண்டும் என்று விவரமாக மயிலம் சைவ மாநாட்டில் தலைமை வகித்தபோது தன் பேருரையில் இராமச்சந்திரனூர் கூறியிருக்கிறூர். அதனை ஒட்டியே

அவர் தம் வேலைத் திட்டத்தை நடத்தியும் வந்திருக்கிறார்.

## 15. வெளிநாடுகளும் சமயப்பணியும்

சமய நிலையப்பார்வையில் இருந்தபோதே வெளியிடங்களுக்குச் சென்று சமயப் பணியும் செய்திருக்கிறார். 1940 குளிர் காலத்தில் வடநாட்டிற்குச் சென்று அங்கிருக்கும் புனிதத் தலங்களைத் தரிசித்திருக்கிறார். வடமதுரை, டெல்லி, அரித்துவாரம், அயோத்தி, காசி, கயா, காளிகட்டம், பூரி, புவனேசுவரம், சிம்மாசலம் முதலிய தலங்களுக்குச் சென்று அங்கு நடக்கும் சமய நிலைய பரிபாலனங்களை ஆராய்ந்திருக்கிறார். அந்தச் சமயத்தில் காசியில் நடந்த கலையியல் மா நாட்டில் கலந்துகொண்டு தென் நாட்டு ஊர்ப் பெயர்களைப் பற்றிய ஒரு ஆராய்ச்சி விரிவுரை நிகழ்த்தினார். மற்றொரு முறை 1943 ல் ஸ்ரீசைலம் என்ற திருப்பருப்பதத்திற்குச் சிவராத்திரி காலத்தில் சென்று அங்கு யாத்திரிகள் படும் வருத்தங்களை நேரில்கண்டு தீர்க்க முயன்றிருக்கிறார். திருப்பருப்பத யாத்திரையைப் பற்றி ஒரு நூலும் எழுதியிருக்கிறார். அந்த முறையில் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரும் சமாஜச் செயலாளர் திரு. அரங்கசாமி முதலியாரும் உடனிருந்து யாத்திரையை இலகுப்படுத்தியது குறிக்கத்தக்கது. இன்னும் ஒருமுறை தென் கன்னடம் வட்டத்திற்குச் சென்று உடுப்பியும் சுப்பிரமணியமும் வழிபட்டார். அப்போது சுப்பிரமணியத்தில் சஷ்டி யாத்திரை நடந்தது. மக்கள்படும் துயரத்தை அளவிடமுடியாது. இருந்தாலும் மிகுந்த ஆர்வத்தோடு செல்லுகிறார்கள். அங்கே சமண நிலையங்களான

முடுபிதிரி, கார்க்கள முதலியவற்றையும் கண்டார். சமண ஆதிக்கத்தில் உள்ள சிவத்தலமாகிய தருமத்தலத்தையும் சக்தி பீடமாகிய மூகாம்பிகை கோயிலையும் பார்த்துவந்தார். அங்கே கண்ட இயற்கை யழகுகளை வேறெவ்விடமும் காண்பதரிது. மற்றும் ஒருமுறை கோதாவரி தீரத்தில் உள்ள பத்திராசலம், பார்க்கச் சென்றார். அந்தச் சமயம் ஸ்ரீராம நவமித் திருவிழா நடைபெற்றது. அதில் முசுலிம் சமயத்து அரசியலார் அந்த ஆலயத்தில் எடுத்துக்கொண்ட முயற்சி குறிப்பிடத்தக்கது. இவ்விதம் தன் அதிகாரவரம்பிற்கு வெளியில் இருந்த தலங்களையும் பார்வையிட்டு அவைகளில் கண்ட முறைகளை ஆராய்ந்து தன் ஆட்சிக்குப் பயன்படுத்திக் கொண்டார்.

அலுவலில் இருந்த காலத்திலேயே தமிழுக்காகப் பல வகையில் பாடுபட்டுவந்தார். சென்னைத் தமிழ்ச் சங்கம், கம்பர் கழகம், மயிலைத் தமிழ்ச் சங்கம், சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் முதலிய பல தமிழ்ச் சங்கங்களில் பங்கு எடுத்துக்கொண்டதுண்டு. இராயப்பேட்டை குகானந்த நிலையத்திலும் நெல்லைக் கழகத்தார் நடத்திய சங்க நூல் மா நாடுகளிலும் அரிய பேச்சுகளை வழங்கினதுண்டு. இந்தக் காலத்தில் சென்னை தமிழறிஞர்களான, திரு. வி. க, தெய்வசிகாமணி முதலியார், கதிரேசன் செட்டியார், பல வித்துவான்கள், தமிழ்ப் பட்டதாரிகள் முதலியோர்களின் நட்பும் கூட்டுறவும் மிகுதியாய்க் கிடைத்தன.

## 16. உயர்தரக் கல்வியும் பல்கலைக் கழகமும்

கோவையில் இருந்தபோது ஆரம்பப் படிப்பு சம்பந்தமாகப் பல தொண்டுகள் புரிந்து வந்தபோதி

லும் நடுத்தரப்படிப்பு உயர்தரப் படிப்பு முதலியவை களை அவர் புறக்கணிக்கவில்லை. நடுத்தரப் படிப்புச் சங்கத்திலும் பல்கலைக் கழகத்திலும் அங்கத்தினராக இருந்தது முன்பே கூறப்பட்டது. மேலும் கோவையில் இலண்டன் மிஷன் சங்கத்தார் ஒரு ஹைஸ்கூல் நடத்தி வந்தார்கள். அந்தப்பாடசாலையை அவர்கள் மூடிவிட உத்தேசித்திருந்தார்கள். அப்போது அதன் தலைமை ஆசிரியர் திரு. சற்குணம் அவர்கள் அதை ஏற்றுக் கொண்டு நடத்துவதற்காக ஒரு சபையை உண்டாக்க முயன்றார். அந்தச் சபையில் இவரும் சேர்ந்து வேலை செய்தார். அச் சபை வேலைசெய்ய முயன்றதும் இவரே அச்சங்கத்திற்கு நிதியாளராகத் தெரிந்தெடுக் கப்பட்டார். அப்பாடசாலை அச்சங்கத்தின் கீழ் மிகவும் நன்றாக வேலை செய்து வருகிறது. பிறகு சென்னைக்குச் சென்றுவிட்டு வந்ததும் மீண்டும் அச் சங்கத்தின் நிதியாளராக இருக்க ஒப்புக்கொண்டார். இப்போது இந்தப் பாடசாலை மாகாணத்திலேயே சிறந்த பாடசாலைகளில் ஒன்றாக இருக்கிறது. பிள்ளை கள் 1000 வரை வாசிக்கிறார்கள்.

1943 - ல் பல்கலைக் கழகத்தில் பட்டதாரிகளின் சார்பாகத் தேர்தல்நடந்தது. அப்போது இராமச்சந்திர ரும் அதற்குப் போட்டிபோட்டு நிற்கவே வெகு சுலபத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டார். மறுபடியும் 1946 ல் தேர்தல் வரவே அதில் மீண்டும் வெற்றி யடைந்தார். இப்போதும் அக்கழகத்தின் அங்கத்தின ராக இருக்கிறார். அந்த விதத்தில் சினேட் (Senate) சபையில் அங்கத்தினராக இருப்பதன்றி அதிலிருந்து அகாடெமிக் கவுன்சில் (Accademic council) என்ற சபையிலும் தேர்தல் பெற்றார். இந்த இரண்டு

சபைகளிலிருந்தும் கல்லூரிப்ப்டிப்புகளுக்குச் சேவை செய்யும் வாய்ப்பு கிடைத்தது. அந்த சங்கங்களி லிருந்து கொண்டு நிறைவேற்றின செயல்களில் இரண்டு சிறந்தவை. முதலாவது, தென் இந்திய ஆலயங்களில் கிடக்கும் கல்வெட்டுக்களிலிருந்து செய் யுட்களைப் பொறுக்கி எடுத்து அவைகளைக் கால வரிசைப்படி பதிப்பிப்பது. இந்தப்பதிப்பினால் தமிழ் மொழி வரலாற்றிற்கு மிகுந்த உதவி கிடைக்கும். இதே முறையில் ஏற்கனவே மைசூர் அரசியலார் கன்னடமொழிக்கு ஒரு ஒப்பற்ற பணி செய்திருக் கிறார்கள். மைசூரிலும் அதற்குச் சுற்றிலுமுள்ள பிராந்தியங்களிலும் உள்ள சாசனங்களைத் தொகுத்து அவைகளைக் காலக் கிரமப்படி அமைத்துக் காலங்களை யும் வகுத்து "கன்னட சாசனபத்திய மஞ்சரி" என்ற பெயரினால் ஒரு நூல் வெளியிட்டிருக்கிறார்கள். அதனை உத்தேசித்தே பல்கலைக் கழகத்திலும் இந்த நூல் வெளியிடும்படி பிரேரேபித்துத் தீர்மானிக்கப்பட் டது. இதனால் தமிழ் மாணவர்களுக்கு மிகுந்த பயன் ஏற்படும்.

இரண்டாவது, தென்னிந்தியாவில் சிறந்து விளங்குகிற சைவ சித்தாந்தம் வைணவ சித்தாந்தம் என்ற இரண்டு சித்தாந்தங்களுக்கும் வேண்டிய ஆதரவுகிடையாது. அத்துவைதம் வேதாந்தம் இவை களுக்கே ஆதரவு இது வரை இருந்தது. தென் நாட்டுக் கென்று சிறப்பாக உள்ள இந்த இரண்டு சித்தாந்தங்களையும் ஆராய்ச்சி செய்து மாணவர்களுக் குப் போதிப்பதற்காக இரண்டு போதகாசிரியர்களை ஏற்படுத்துமாறு ஒரு தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றிவைத்தார். தொடக்கத்தில் இந்தத் தீர்

மானத்திற்கு ஆட்சேபனை ஏற்பட்டது. இரண்டு மூன்று முறை வற்புறுத்தியதின் பேரில் அது கழகத்தாரால் ஆங்கீகரிக்கப்பட்டது. இந்த இரண்டு தீர்மானங்களும் நிறைவேறி மாணவர்களுக்குப் பெரும் பயன் அளிப்பதாகுக!

பல்கலைக் கழகத்தாரால் வெளிப்புற உபன்னியாசங்கள் நடத்தி வைக்கும்படி ஒரு திட்டம் உண்டு. அந்தத் திட்டத்தின்படி கோவையில் ஆசிரியர் ஹீராஸ் என்ற பெரியாரைக் கொண்டு இரண்டு அருமையான உபந்நியாசங்கள் இயற்றி வைத்தார். அவைகள் சிந்து நதி தீரத்து நாகரீகத்தைக் குறித்தவை ஆகும். இன்னும் பல தமிழ் மொழி வெளியீடுகளைக் குறித்துப் பாடுபட்டுவந்திருக்கிறார். சென்னை மாகாணத் தமிழ்க் கழகத்தார்கள் பல தமிழன்பர்களுக்குப் பட்டங்கள் வழங்கியபோது திரு. C. K. சு. முதலியாருக்குச் "சிவக்கவிமணி" என்றும், இராமச்சந்திரனுக்கு "செந்தமிழ்ப் புரவலர்" என்றும் பட்டங்கள் வழங்கினார்கள். என்றாலும் நண்பர்களில் C. M. R. என்றும், எழுத்துலகில் "கோவைகிழார்" என்றுமே இவர் வழங்கப்படுகிறார்.

## 17. ஆசிரியவேலையும் ஆக்கவேலையும்

சைவசித்தாந்த மகா சமாசத்தின் திங்கள் வெளியீடு "சித்தாந்தம்" என்ற தாள் ஆகும். இதனை வெகு ஆண்டுகளாகத் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் நடத்தி வந்தார்கள். அதில் சமயத்தைப் பற்றிப் பல அருமையான கட்டுரைகள் வெளிவந்து கொண்டிருந்தன. இப்படி இருக்க அப் பெரியார் அத்தொழிலிலிருந்து விலகிக் கொள்ளவே

திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் அதனை ஏற்றுக் கொண்டார்கள். அவர்களும் 1947 பிப்ரவரியில் விலகிக் கொண்டார்கள். அப்போது செயற்குழுவார்கள் இராமச்சந்திரனுரை அக்கடமையைச் செய்யும்படி பணித்தார்கள். அவரும் அதனை மறுக்க முடியாமல் ஏற்றுக் கொள்ள வேண்டிவந்தது. அது முதல் அவரே இதுவரை ஆசிரியராக இருந்து வருகிருர். அவர் அத்தொழிலை ஏற்றுக் கொண்டகாலத்தில் சந்தாதாரர்கள் 350 பேர்தான் இருந்தார்கள். இப்போது அது மூன்று மடங்கு அதிகரித்துள்ளது.

இந்த நிலைமை சற்றேனும் போதாதது; குறைந்த பட்சம் 3,000 சந்தாதாரர்கள் இருந்தால் அன்றி அத்தாளை பயனுள்ளதாக நடத்த முடியாது. தமிழ்நாட்டில் கோடிக் கணக்காகச் சைவப்பெருமக்கள் இருந்தும் 3,000 பேர் கூடச் சந்தாதார்கள்ளாகச் சேரா விட்டால் இத்தாளை நடத்திப் பயனென்ன ? இதுவரைதாளில் ஒருவித முறையும் இல்லாமல் வந்த கட்டுரைகளை எல்லாம் அச்சடித்து வந்தார்கள். ஆனல் இவர் ஆசிரியத் தொழிலை ஏற்றுக் கொண்டவுடனே அதற்கு ஒரு திட்டம் வகுத்து அதன்படி தாளை நடத்திவருகிருர். தாளின் பொருள் அடக்கத்தை எட்டு பிரிவுகள் ஆக வகுத்து அவைகளில் ஒவ்வொன்றிலும் அதன் தலைப்பிற் கேற்ற கட்டுரைகளையே தெரிந்தெடுத்துப் பதிப்பிக்கத் தொடங்கினர். ஏதாவது ஒரு தலைப்பிற்குக் கட்டுரை கிடைக்காவிட்டால் தானே எழுதிச் சேர்த்திவிடுவார். இந்த வகையில் தான் எப்போதும் அது முழுத் தன்மை பெறத் தொடங்கியது. பிரிவுகள், 1. ஒலிபரப்பு (ஆசிரியர் கருத்துக்கள்), 2. தலப்பகுதி (யாதாவது ஒரு புனிதத்

தலத்தைக் குறித்த வரலாறு), 3. சாத்திரப்பகுதி (சிவஞானக் கட்டுரை), 4. சமயப்பகுதி (சமயமுன்னேற்றம்), 5. கலைப்பகுதி (விஞ்ஞானம்), 6. கவிப்பகுதி (இலக்கியம்), 7. ஆராய்ச்சிப்பகுதி (சரிதவரலாறு), 8. விரிவுரைப்பகுதி (முன் செய்த விரிவுரைகள்) என்பன. இந்த வகையாகப் பிரிவினை செய்து தாளைச் செம்மைப்படுத்தினதினால் தாளுக்குத்தக்க கட்டுரைகள் வருவதன்றி அவைகளைப் பொதுமக்கள் ஏற்றுக் கொள்ளவும் தொடங்குகிறார்கள்.

சமயமேம்பாட்டிற்குப் பல ஆக்கவேலைகள் இன்றியமையாததாக இருக்கின்றன. சமாசத்திற்கு இதுவரை ஒரு நடுநிலையம் இல்லை. சைவ மக்களும் அறிஞர்களும் மாணவர்களும் சென்னை சென்றால் தங்குவதற்குப் போதுமான இடவசதி இல்லை. இலங்கை முதலிய இடங்களைக் கண்ட பிறகு நாம் வெட்கம் உறவேண்டும். சில ஆண்டுகளுக்கு முந்தி தொடங்கின இந்தி சமாசத்திற்கு லட்சக் கணக்கான மதிப்புள்ள ஒரு நடு நிலையமும் அச்சகமும் பாடசாலைகளும் சென்னையிலேயே உண்டு. 42 ஆண்டுகளாக வேலை செய்யும் சமாசத்திற்கோ ஒரு நடுநிலையம் இல்லை. சைவமடங்களோ மிகப்பெருத்த செல்வ நிலையங்களாக இருக்கின்றன. அப்படியிருந்தும் யாதொரு ஒத்தாசையும் இல்லை. சமாசத்திற்கு என்று ஒரு நடுநிலையம் இருந்தால் இந்தத் தாழ்ந்த நிலைமை ஏற்படுமா? ஆகவே ஒரு நடுநிலையம், நூற்பதிப்புச் சாலை, பிரசார நிலையம் முதலியவைகள் உடனே ஏற்படவேண்டும். இவைகளைக் குறித்து, சித்தாந்தத்தில் அடிக்கடி எழுதினதும் அன்றி 1947 ல் நடந்த 42வது சைவ மா நாட்டில் தீர்மான

உருவத்தில் நிறைவேற்றியிருக்கிறார். இவ்வெண்ணம் விரைவில் நிறைவேறுவதாகுக!

## 18. ஓய்வும் அதிலும் தொண்டும்

1945 மே திங்களில் ஓய்வு வந்தது. பல பேர் சமய நிலையைப் பாதுகாப்பில் இனியும் சில ஆண்டுகள் வேலை செய்தால் நல்லது என்று சொன்னார்கள். ஆனால் அவர்களுடைய எண்ணம் பலிக்க வில்லை. கடமையைச் செய்யாமல் காலம் தள்ளியிருந்தால் அப் பதவி நீடித்திருக்கும் என்றும் சிலர் வெளிப்படை யாகச் சொன்னதுமுண்டு. அது காலத்தின் கோலம். அதைப்பற்றி நொந்து கொண்டால் பயனில்லை.

ஓய்வு பெற்றதும் கோவையில் பழைய குடும்ப வீட்டிலேயே இரண்டரை ஆண்டுகள் இருக்க வேண் டியிருந்தது. தான் வசித்துவந்த பங்களாவை இரா ணுவத்தில் எடுத்துக் கொண்டு திருப்பிக் கொடாமல் வைத்திருந்தார்கள் இந்த நிலைமை குடித்தன வாழ்க்கைக்கு மிகவும் தொந்தரவாக இருந்தது. திரும் பித் தன் இருப்பிடத்தை மீட்க பெரும் முயற்சி எடுக்க வேண்டி வந்தது. இரண்டரை ஆண்டுகள் கழித்தே அது கிடைத்தது.

ஓய்வு கிடைத்தது என்பது பேருக்குதான். முந்தி செய்து வந்த பொது வேலைகளுடன் புது வேலைகளும் வந்தன. பல்கலைக் கழகத்தில் சேர்ந்திருந்ததினால் தருமபுர ஆதீனத்தார் ஏற்படுத்த எண்ணிய கீழ்க்கலைக் கல்லூரி ஆங்கீகாரம் பெறுவதற்கு முயற்சிகள் எடுத் துக் கொண்டார். அது நிறைவேறிற்று. கோவை கைத்தறித் துணிவர்த்தகர்களும் ஏற்றுமதியாளர் களும் அவருடைய துணை கோரிக் கொண்டதினால்

அவர்களுக்கு ஒரு சங்கம் நிறுவி அதற்குத் தலைமையும் வகிக்க வேண்டிவந்தது. கைத்தறித் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கத்திலும் நிர்வாக அங்கத்தினர் பதவி ஏற்க வேண்டிவந்தது. மேலும், உணவுக் கட்டுப் பாட்டுக் கழகத்திலும், நெசவுக்கட்டுப்பாட்டுக் கழகத்திலும் அங்கத்தினராக இருக்கும்படி அதிகாரிகள் நியமித்தார்கள். அந்த இரண்டு கழகங்களிலும் அங்கத்தினர்ஆகி மாதந்தோறும் பல கூட்டங்களுக்குச் செல்ல வேண்டிவந்தது. மதுவிலக்குக் குழுவிலும் அங்கத்தினராக இருந்து பேரூர் சென்னிமலை முதலிய இடங்களில் நடத்தி வந்த கிராம ஊழியர் பயிற்சி வகுப்புகளில் கலந்து கொண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

1947ல் இலங்கை அகில சைவ இளைஞர் கழகத்தார் நடத்திய சைவ மா நாட்டிற்குத் திரு. C. K. சு. அவர்களையும் இராமச்சந்திரனுரையும் அழைத்தார்கள். அவர்கள் இருவரும் இணங்கிக்கொண்டு இரண்டாம் முறையாக இலங்கைக்குச் சென்றுர்கள். யாழ்ப்பாணத்தில் இந்துக் கல்லூரியில் மகாநாடு நடை பெற்றது. அதில் ஒரு நாள் இவர் தலைமை வகித்தார். சுற்றிலும் உள்ள ஊர்களுக்கு அழைத்தார்கள். தெல்லிப் பழை, காரைத் தீவு முதலிய பல இடங்களுக்குச் சென்று சைவச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினுர்கள். அப்போது C. K. S. ஊருக்குத்திரும்பிச் செல்லநேர்ந்தது. இராமச்சந்திரனுர் இரண்டுவாரங்கள்வரை இலங்கையிலேயே இருந்து யாழ்ப்பாண மாகாணத்தில் பல ஊர் களிலும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினுர். பிறகு அநுராதபுரம் கொழும்பு, காலிமுதலிய ஊர்களில்விவேகாகந்த சபைகளிலும் சிவாலயத்திலும் சொற்பொழிவு

கள் நடத்தினர். அங்கிருந்த அன்பர்கள் செய்த அன்புச் செயல்களுக்கு அளவில்லை. பிறகு கதிர்காமத்திற்குச் சென்று அங்கு முருகப்பிரானை வழிபட்டு விட்டு இந்தியா திரும்பினர். இலங்கைப் பயணத்தைக் குறித்து "கடலில் ஒரு முத்து" என்ற ஒரு நூலையும் எழுதி இருக்கிறார். பிறகு திருச்சி வானொலியில் "ஆலயங்களும் கலாச்சாரமும்" "ஆலயங்களின் நிதி நிலைமை" என்ற தலைப்புக்களில் இரண்டு பேச்சுக் களைத் தன் அனுபவத்தைக் கொண்டு விளக்கிப் பேசியிருக்கிறார். இந்த வகையில் அவருக்கு ஓய்வு என்பது பெயருக்கு மட்டும் இருந்ததென்று அறியவேண்டும்.

## 19. மீண்டும் எழுத்துப்பணி

ஓய்வு எடுத்தபிறகு சைவத்திற்குத் தொண்டு செய்தும் அதன் வெளியீடாகிய சித்தாந்தத்திற்கு ஆசிரியராக இருந்து அதை நடத்தியது மாத்திரம் அன்றி, கட்டுரைகளையும் நூல்களையும் எழுதும் ஒரு செயலில் தன் ஒழிவு நேரத்தைக் கழித்து வந்தார். ஒவ்வொரு தடவை பொருள் சம்பாதிக்கும் முறையில் இறங்கலாமோ என்று நண்பர்கள் கேட்டதுண்டு. கோவை நகரில் அவரது குலத்தில் பல உறவினர்கள் மிகத் தாழ்ந்த நிலையிலிருந்து பெருத்த செல்வவான்க ளாகத் திகழ்ந்து விளங்கினர்கள். பெரும் போருக்குப் பிறகு நாட்டில் ஏற்பட்ட பல மாறுதல்கள் சிக்கல்கள் கட்டுப்பாடுகள் இவைகளின் ஒத்தாசையைப் பெற்றுப் பல மக்கள் நினைக்கமுடியாத செல்வம் பெற்று வாழத் தொடங்கினர்கள். அந்த நிலைமையைக்காட்டி இவரையும் அதில் ஈடுபடுத்தத் தூண்டினர்கள். ஆனல் அவ்வழியில் இவர் மனம் செல்லவில்லை. இவர்

அதில் இறங்கித் தம்பெயரைக் கெடுத்துக்கொள்ளவும் இல்லை. முன்னிருந்த பொருள் நிலைமையிலேயே இருந்தார். போதும் என்ற கொள்கையே இவருக்கு இருந்தது. வீண் கவலைகளைக் கொண்டு மனச் சாந்தியை இழக்கும் எண்ணம் சிறிதும் இவருக்கு இருக்கவில்லை ஆகவே இவர் தம் மனதிற்கு உற்சாகத்தைத் தரக் கூடிய எழுத்துப் பணியிலே இறங்கினார். அதற்கு இணையாகச் சொல்லக்கூடிய கல்விப் பணியிலும் இறங்கினார். உயர்தரப் பாடசாலை நடத்தும் பணியில் பங்கு எடுத்துக்கொண்டார். யூனியன் ஹைஸ்கூலில் மீண்டும் நிதியாளர் ஆனார். தேவாங்க ஹைஸ்கூல் தாபிக்கும் முயற்சியில் இறங்கினார். 1948 ஜனவரி தேதியில் தேவாங்க ஹைஸ்கூல் கால்கோளும் முதல் அமைச்சர் தலைமையில் கல்வி அமைச்சர் நட்டு வாழ்த்தினார். கட்டடமும் $4\frac{1}{2}$ திங்களில் கட்டப்பட்டு 21-6-48 தேதியில் முதல்அமைச்சராலேயே திறந்துவைக்கப்பட்டது.

எழுத்துப் பணியில் அனேக கட்டுரைகளும் பாடல்களும் எழுதியிருக்கிறார். பல கட்டுரைகள் தமிழ்நாட்டுத் திங்கள் வெளியீடுகளில் வந்திருக்கின்றன. நூல்களை எழுதத் தொடங்கி, “இதுவோ எங்கள் கோவை” என்ற நூலைத் தனது நகரமாகிய கோவையின் வரலாறாக எழுதினார். மத்திய இந்தியாவில் தான் சுற்றிக் கண்டுவந்த காட்சிகளையும் ஆலய வரலாறுகளையும் பல பகுதிகளாக எழுதி ஒரு நூலாக ஆக்கியிருக்கிறார். தமிழ்மொழிக்கு ஒரு கலைக்களஞ்சியம் வேண்டும் என்ற எண்ணம் கிளம்பாததற்கு முன்பே மாணவர்களுக்காக ஒரு சிறு களஞ்சியம் எழுதிவைத்திருக்கிறார். சிவஞான போதத்தைச் சிறுவர்கள் படித்து அறிந்துகொள்ளும் முறையில் சிறு

கதைகளைக் கொண்டு விளக்கி "குழந்தையர் சமய ஞானம்" என்ற தலைப்பில் ஒரு சிறு நூல் எழுதியிருக்கிறார். தனது ஆப்த நண்பர் சிவக் கவிமணி அவர்களின் வாழ்க்கைத் திறனை ஒரு சிறு நூலாக எழுதி அவரது பெரியபுராண விரிவுரை நிறைவுவிழாவில் 12 - 7 - 48 ல் வெளியிடச் செய்தார்.

இந்நூல்கள் எல்லாம் அச்சேறச் சமயம் வாய்க்கவில்லை. கடிதப் பஞ்சமும், கடிதக் கட்டுப்பாடும், அச்சுக் கிராக்கியும் தடைகளாக நிற்கின்றன. கூடிய விரைவில் இவைகள் வெளிவரும் என்று எதிர்பார்க்கப்படுகின்றது.

## 20. நாள்தொண்டும் நாட்குறிப்பும்

"சைவப் பாதிரியார்" என்று நண்பர் புகழும் திரு. ச. சச்சிதானந்தம்பிள்ளையவர்கள் வாரவழிபாடு என்ற கோட்பாட்டை, இயற்றி அதனை நாடெங்கும் பரப்பி வைத்துவருகின்றார். அது மிகவும் போற்றத்தக்கது. இராமச்சந்திரனாரோ நாள் வழிபாடு என்ற கொள்கையை இளம் வயதிலிருந்தே போற்றி வந்திருக்கிறார். அந்த வழிபாட்டை இன்றும் விடாமல் காத்துக் கொண்டு வருகிறார்.

காலை விடியலின் முன் எழுந்தவுடனே காலைக் கடனை முடித்துவிட்டு ஊருக்கு வெளியே சிறிது தூரம் உலாவி வருவதுண்டு. அப்போது தூய்மையான குளிர்ந்த காற்று உடலில் தோயவே மிகவும் உற்சாகப்படுவார். இவ்விதம் உலாவி வரும் தன் கண்ணில் படும் எந்தக் காட்சியையாவது தன் நெஞ்சிற் படம் போல் பிடித்து விடுவார். திரும்பி வீடுவந்து சேர்ந்தவுடன் சிறிது நேரம் கடவுளைத் திருமுறைப்

பாக்களால் துதித்துவிட்டுத் தமிழ் மறையை எடுத்து வைத்துக் கொண்டு முந்தின நாள் ஓதி நிறுத்தின இடத்திலிருந்து மேல் உள்ள ஒரு பகுதியை ஓதுவார். இந்தப் பாராயணத் தொழில் சுமார் 15 நிமிடம் முதல் 30 நிமிடம் வரை பிடிக்கும். இவ்வாறு பன்னிரண்டு திரு முறைகளையும் பல தடவை திருப்பியிருக்கிறார். பிறகு எழுதுகோல் எடுத்துக் கொண்டு தான் காலையில் கண்டு மனதில் இருத்தின காட்சியைச் சில பாக்களில் எழுதுவார். வெகுவாக நாள் தோறும் நான் கைந்து பாக்கள் எழுதுவதுண்டு. இதுவரை ஆயிரக் கணக்கான பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. பிறகு குளித்துவிட்டுச் சிற்றுண்டி அருந்திவிட்டுத் தனது தொழிலுக்குச் செல்லுவார். பகல் வேளையில் தொழில் செய்துவிட்டு மாலையில் வீடு திரும்பினவுடன் சிறிது சிற்றுண்டி அருந்துவிட்டு வெளியேசெல்வார். மாலை நேரங்களிலும் தவறுமல் உலாத்துவதுண்டு. பெரும் பான்மையான நாட்களில் ஏதாவது ஒரு இடத்தில் பேச்சு இருக்கும். அல்லது தலைமை வகிக்க வேண்டி யிருக்கும். அவைகள் இல்லாத நாள்களில் நடத்தலே உடல் அப்பியாசமாக வைத்துக் கொண்டிருப்பார்.

வெகுவாக இருட்டிற்கு முந்தியே வீடு வந்து சேர்ந்து விடுவார். சிறிது நேரம் படித்துவிட்டு உணவு அருந்திவிட்டுத் தன் தினசரிக் குறிப்புநூலில் அன்று எண்ணினதும் செய்ததும் ஆன குறிப்புக்களை எழுதி வைப்பார். இவ்வாறு எழுதி வைத்த படிகள் முப்பது நாற்பது உண்டு. 1906 ஆண்டிலும் பிறகு 1912 முத லும் எழுதி வைத்த நூல்கள் ஒரு பெரிய வரலாறுக அமையும். இந்தமுறையை அனுசரிக்கும் படித் தன் நண்பர்களுக்கு அவர் பல முறை எடுத்துக் கூறிய

துண்டு. ஆனால் அதில் பல பேருக்கு நம்பிக்கை இல்லை. தற் சிறப்பிற்காக இது எழுதப்படுகிறது என்று ஏசுகிறார்கள். தற்சிறப்பு இதில் இல்லை. தன்னலம் ஒரு பங்கு இருக்கலாம். யாதாவது ஒரு கால் மனம் சஞ்சலமாக இருக்கும்போது பழைய தினசரிகளை எடுத்து வாசித்தால் அவைகளில் பல பழைய எண்ணங்கள் கண் முன் நிற்கும். அப்போது இவ்வாறும் எண்ணினோமா இவைகளையும் செய்தோமா என்று நாமேவியப்படைவோம். இந்த வியப்பில் நமது சஞ்சலம் முழுகிப்போய் மாய்ந்து விடும். இதுவே ஒரு பெரிய உதவி அல்லவா? இது தன்னலம் தான். தன்னலம் ஆனாலும் நன்னலம் ஆகும். ஆகவே இவர் செய்துவந்த இந்த இடைவிடாத பணி ஒரு எடுத்துக் காட்டாக இருக்கும். தினசரி எழுதினவுடனே சுமார் பத்துமணி அளவில் படுக்கைக்குச் செல்வார். இது தான் தினசரி முறை.

இளைய வயதில் வாரத்திற்கு ஒரு முறை ஞாயிற்றுக்கிழமைகளில் காலையில் ஊரைச் சுற்றிப் பொது மக்களின் யோகக் சேமங்களை விசாரிப்பது உண்டு. நகரசபையில் இருந்தபோது இது சிறப்பாக நடந்தது. பிறகு தன் பாடசாலையாக இருந்த ஸ்ரீ சாரதா பெண் பாடசாலைக்குச் சென்று அங்கே சிறுமிகளுக்குச் சிறு கதைகளைச் சொல்லி வந்தார். அப்போது அவர்களுக்குத் தேவாராதிகளைப் பாடச் செய்ததுண்டு. மற்றொரு முறை நகரசபையின் கீழ் இருந்த ஆரம்பப் பாடசாலைகளில் வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமைகளில் சிறு கதைகளின் மூலமாகச் சமய அறிவை உண்டுபண்ணும் திட்டம் செய்தார். அந்தத் திட்டம் சில நாட்கள் நடந்தன. ஆனால் ஒத்

தாசையும் தகுந்த ஆதரவும் இல்லாமல் அந்தத் திட்டம் நின்று விட்டது.

பிறகு சென்னைக்குச் சென்ற பிறகு தன் வீட்டிலேயே வார வழிபாடு நடத்தி வந்தார். தன் குடும்பத்தார் எல்லாரும் ஒரு அறையில் உட்கார்ந்து கொண்டு சில தேவாரப் பாடல்களையும் பின் திருத் தொண்டர்புராணத்திலிருந்து ஒரு சரிதத்தையும் எடுத்துச் சொல்லி வழிபாட்டைச் செய்ததுண்டு. அது கிறிஸ்தவ குடும்பவங்களில் நடைப்பெற்று வருகிற ஒரு வழக்கம். பிரமஞான சபைகளிலும் நடைபெறும். இந்த வகையில் ஒரு குடும்பத்தில் உள்ள பல உறவினர்களுள்ளும் அன்லியோன்ய அன்பு ஏற்பட வழி உண்டாகும். இந்துக்களில் பல குடும்பங்களில் இவ்வித உறவு இன்றிக் கலகங்களும் பிரிவினைகளும் ஏற்படுவது சகஜம். இந்த நிலைமை உத்தேசித்தால் இவ்வழி பாடு சிறந்ததென்று தோன்றவில்லையா? சிறுவர்களும் சமய அன்பில் ஈடு படுவார்கள். பின் காலத்தில் இது அவர்களுக்குப் பெரும்பயன் அளிக்கும்.

## 21. பின்னுரை

இராமச்சந்திரனுருடைய குடும்பம் கடவுள் கிருபையினுல் சீர்பெற்று வளர்ந்திருக்கிறது. ஒரு பெண்ணும் ஐந்து ஆண்பிள்ளைகளும் உண்டு. பெண்ணுக்கு திருமணம் ஆகி பேரன்மாரும் பேத்தியும் உண்டு. மூத்த மகன் சட்டம்படித்து வழக்கறிஞனுக இருக்கிருன். அவனுக்கும் நல்ல படிப்புள்ள மனைவி வாய்த்து ஒரு மகனும் ஒரு மகளும் பெற்று வாழுகிருன். இரண்டாவது மகன் பொறியியல் பட்டம்

பெற்று உத்தியோகத்தில் இருக்கிறான். இவன் இளஞ் சைவப் புலவர் பட்டம் பெற்று ஞானியார் சுவாமிகளால் பத்திரம் வழங்கப்பெற்றவன். ஏனைய மூன்று மக்களும் படித்துவருகிறார்கள். குடும்பம் தற்போது இராமநாத புரத்தில் பங்களாவில் குடியிருந்து வருகின்றது. குடும்பத்தில் ஒரு அரிய நூலகமும் ஏட்டுத் தொகுதியும் உண்டு. வீட்டுச் சுற்றிலும் தோட்டம் இனிமையையும் குளிர்ச்சியையும் தருவதாகும்.

இந்த ஆண்டு இராமச்சந்திரனாருக்கு 60-ம் ஆண்டு நடைபெறுகிறது. சர்வதாரி (1948) கார்த்திகைத் திங்கள் சித்திரை நாளாகிய நவம்பர் 27-ம் தேதியில் இவருக்கு 60 ஆண்டு நிறைவு ஆகிறது. இவர் ஒரு ஷஷ்டி ஆப்தம் சேவை செய்து வருவதற்கு எல்லாம் வல்ல இறைவன் அருளே காரண பூதமாக விளங்குகிறது.

" இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து இறைபணி செய்ய எம்பெருமான் அருள் புரிவராக!